இறையுணர்வில் எண்ணங்களின் சங்கமம்
- அளிப்பது இந்து

**வா**ழ்வின்
வியக்க வைக்கும் வண்ணங்கள்.
நினைக்க வைக்கும் தருணங்கள்.
இந்து கலர் பிலிமில்
இவற்றை பதித்திடுவீர்,
எண்ணங்களில் என்றென்றும்
நிலைத்திடச் செய்திடுவீர்.




இந்துஸ்தான் போட்டோ பிலிம்ஸ்
மானுபாக்சரிங் கம்பெனி லிமிடெட்
(ஒரு இந்திய அரசு நிறுவனம்)




Sista's-HPF.1235.89 TM B

# கரும்பலகைத் திட்டத்தில் கண்டமேனிக்குத் தில்லுமுல்லு!

●● '...ஆடலழகி சந்திரிகாவைத்தான் சொல்லுகிறேன். அந்த அழகு என்னைப் பார்த்துச் சிரித்தது. என் உடல் எல்லாம் புல்லரித்தது. என் உள்ளம் துடித்தது. செம்பவள உதடுகள் அசைந்தன. தேன் குடிக்கும் வண்டு போல என் அதரம் துடித்தது...'

●● 'மணம் கமழும் மலர் மஞ்சம்; முழு நிலவில் முதல் இரவு, மணம் வீசும் மலர் இதழ்கள் — எல்லாம் என் வாழ்வில் கனவாகி விட்டன....'

— பட்டுக்கோட்டை குமாரவேல் எழுதிய 'சோமநாத்' என்கிற புத்தகத்தின் சில பகுதிகள்தான் இவை. இதில் என்ன விசேஷம் என்கிறீர்களா...? இந்த 'சோமநாத்' புத்தகம் ஒன்று முதல் ஐந்து வகுப்புகளில் படிக்கும் தொடக்கப் பள்ளிக் குழந்தைகளுக்குக் கல்வித் துறை வாங்கித் தந்துள்ள நூலகப் புத்தகங்களுள் ஒன்று!

அதற்குள் அவசரப்பட்டு முகம் சுளிக்காதீர்கள்... இதை விடப் பெரிய அக்கிரமங்களை வரி செலுத்துகிறவர் என்ற முறையில் நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது.

'நெல்லி மரம்' என்ற புத்தகமும் இதே வகுப்புச் சிறுவர்களுக்கு வாங்கப்பட்டுள்ளது. இதில், நெல்லிக்காய் எப்படி நீண்ட நேரம் உடலுறவு கொள்ள உதவுகிறது என்பது விவரமாய் எடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது!

இத்தகைய புத்தகங்களெல்லாம் தொடக்கப் பள்ளிக் குழந்தைகளுக்கு எப்படி, ஏன் அளிக்கப்பட்டன என்று கொஞ்சம் உட்புகுந்து விசாரித்தோம்... அதிர்ச்சிக்கு மேல் அதிர்ச்சி தரும் தகவல்களைக் கூறினார் பதிப்பக வட்டத்து நண்பர் ஒருவர்:

மத்திய அரசின் கரும்பலகைத் திட்டத்தின் (operation black board) கீழ், நாடெங்கிலுமுள்ள தொடக்கப் பள்ளி மாணவர்களுக்குக் கல்வியுடன் பொது அறிவையும் வளர்க்கும் விதமாய்ப் பள்ளி நூலகங்களுக்குப் புத்தகங்



கள் வழங்க முடிவு செய்யப்பட்டது. அதன்படி மாநிலவாரியாக நிதி ஒதுக்கீடு செய்யப்பட்டது. தமிழகத்துக்குக் கிடைத்த பங்கு சுமார் ஆறு கோடி ரூபாய்!

திட்டத்தின் முதல் கட்டமாகச் சென்ற ஆண்டு மே மாதம், பிரபல பதிப்பாளர்களிடம் சிறுவர் புத்தகங்கள் கோரி விளம்பரம் வெளியிடப்பட்டது. விளம்பரம் கண்டு, அனுப்பப்பட்ட புத்தகங்களை விதிமுறைகள்படி பரிசீலித்துத் தேர்ந்தெடுத்திருந்தால் 'சோமநாத்' போன்ற நூல்கள் எப்படி வாங்கப்பட்டிருக்க முடியும்?

புத்தகங்களைத் தேர்வு செய்யும் குழுவில் பிரபல எழுத்தாளர்கள், ஓவியர்கள், பதிப்பக நிபுணர்கள், சிறுவர் புத்தக விமர்சகர்கள் ஆகியோர் இடம்பெற்றிருக்க வேண்டும் என்பது விதி. ஆனால் தமிழகத்தில் இந்தத் தேர்வுக் குழு உறுப்பினர்கள் மூவருமே அரசாங்க அதிகாரிகள்!

ஆங்கில அகராதிகள் மற்றும் கலைக் களஞ்சியம் போன்றவை வாங்க அனுமதி இருந்தாலும் பெரும் பகுதி பணம் தமிழ் நூல்கள் வாங்கவே பயன்படுத்தப்பட வேண்டும் என்பது விதி. ஆனால் பெரும் பகுதி நிதி ஆங்கிலப் புத்தகங்கள் வாங்கவே செலவழிக்கப்பட்டுள்ளது. இந்த நூல்களும் பதிப்பாளர்களிடமிருந்து வாங்கப்படாமல் விற்பனையாளர்களிடமிருந்தே வாங்கப்பட்டுள்ளன.

ஆங்கிலப் புத்தகங்கள் வாங்கியது போக மிச்சமான பணத்தில்தான் 'சோமநாத்' போன்ற புத்தகங்கள் வாங்கப்பட்டிருக்கின்றன.

இந்தத் தில்லுமுல்லுகளைச் சில பதிப்பாளர்கள் கல்வி அமைச்சர் அன்பழகனிடம் சுட்டிக் காட்டினார்கள். முதல் தவணை நூல்கள் கவர்னர் ஆட்சியில் வாங்கப்பட்டதால் தாம் எதுவும் செய்வதற்கில்லை என்றும் இனி அது போல் நடவாது என்றும் உறுதியளித்தார்.

''அவர்தான் தேர்தல்ல தோற்றுப் போயிட்டாரே, பின்னே ஏன் விடு விடாப் போய் நன்றி சொல்றார்?''

''டெபாஸிட் இழக்கச் செய்யாம வோட்டுப் போட்டதுக்கு நன்றி சொல்கிறார்!''

— சீர்காழி வி. வெங்கட்.



ஆனால், இரண்டாம் முறை சிறுவர் புத்தகங்கள் கோரி விளம்பரம் வெளியிட்ட பிறகும் தில்லுமுல்லுகள் தொடர்ந்து நடந்து வருகின்றன என்கின்றனர் பதிப்பக வட்டத்தினர்.

தேர்வாகும் புத்தகங்கள் குழந்தைகள் பண்பையும் பொது அறிவையும் வளர்க்கும் கருத்துக்கள் உடையவையாய், பெரிய எழுத்துக்களில் அச்சிடப்பட்டு, படங்கள் நிறைந்தவையாய் இருக்க வேண்டும் என்று வலியுறுத்தப்பட்டுள்ளபோதிலும் 'சோமநாத்' போன்ற நூல்கள் தேர்வு செய்யப்பட்டுள்ளன.

அழ. வள்ளியப்பா போன்ற குழந்தை எழுத்தாளர்களின் நூல்கள், மத்திய, மாநில அரசுகளின் குழந்தை இலக்கியப் பட்டியலில் இடம்பெற்றுள்ள நூல்கள் எல்லாம் பெரிய எழுத்துக்களில் அச்சிடப்பட்டிருந்தும் தேர்வுக் குழுவினர் கண்ணில்படவேயில்லை. மாறாக 'அப்பளாம், வற்றல் செய்வது எப்படி' என்று விளக்கும் புத்தகம் வாங்கப்பட்டுள்ளது!

''தேர்வுக் குழுவினரை 'ஸ்பெஷலாய்' கவனிக்கும் பதிப்பாளர்களுக்குத் தடிமனான புத்தகங்களுக்கு ஆர்டர் கிடைக்கும். அவர்களுக்கு வேண்டாதவர்களெனில் மெலிதான புத்தகங்கள்தான் வாங்குவார்கள்'' என்று புலம்பினார் ஒரு பதிப்பாளர்.

மற்றொரு பதிப்பாளர் லேட்டஸ்ட் தில்லுமுல்லுவைக் குறிப்பிட்டார்:

''புத்தக ஆர்டர்களில் நடக்கும் மோசடிகள் வெளிப்பட்டுக் கொண்டிருப்பதால், சம்பந்தப்பட்ட பதிப்பாளர்கள் கையிலிருக்கும் இருநூறு முந்நூறு பிரதிகளை உடனடியாக சப்ளை செய்து விடுவதில் குறியாக இருக்கின்றனர். இரண்டு மாத அவகாசம் எடுத்துக் கொண்டு பதினோராயிரம் பிரதிகளை (இதுதான் ஆர்டர்) அச்சிட்டு சப்ளை செய்வதற்குள் ஆர்டர்கள் ரத்தாகி விடுமோ என்று இவர்களுக்குப் பயம்!''

''ஒரு பதிப்பாளரிடம் ஒரு புத்தகம்தான் ஆர்டர் கொடுக்கலாம் என்று சொல்லி வேண்டாதவர்களைத் தட்டிக் கழிக்கிறார்கள்'' என்பது இன்னொரு குற்றச்சாட்டு. இதைச் சமாளிக்கப் பல்வேறு பதிப்பகப் பெயர்களில் (ஒரே முகவரியுடன்) லெட்டர் ஹெட் தயாரித்துச் சிலர் உபயோகித்து வருகின்றனராம்!

இப்படியாக, இளம் சிறுவர்களின் அறிவை வளர்த்து, அவர்கள் வாழ்க்கையை வளமாக்க, சில நல்லறிஞர்கள் நன்னோக்குடன் வகுத்த திட்டம், நம் நாட்டின் இதர பல அரசாங்கத் திட்டங்களைப் போலவே சிரிப்பாய்ச் சிரிக்கிறது! மக்களின் வரிப் பணம் சுயநலமிகளால் சுரண்டப்படுவது இருக்கட்டும்; அதே சமயத்தில் எதிர்காலத் தலைமுறையின் அறிவையும் அல்லவா சுரண்டுகிறார்கள்!

— மௌஷ்மி.

# அண்ணாமலைக்கு அறுபது

பொன் பரமகுரு:

நான் சரித்திரம் எடுத்திருந்தேன். எனக்குச் சரித்திர விரிவுரையையாளராக இருந்தவர் தற்போது தமிழக கவர்னராக இருக்கும் அலெக்ஸாண்டர். இந்திய சரித்திரத்தைத் திரைப்படத்தின் 'பிளாஷ் பேக்' காட்சி போல விவரிப்பார். நவீன சரித்திரம் எடுத்தவர் 'சிக்கா' என்னும் சீனிவாசாச்சாரி. கதிரேசன் செட்டியார், சிதம்பரநாதன் செட்டியார் போன்ற பிரபல தமிழ்ப் பேராசிரியர்கள் இருந்தனர். அப்போது (40—42) துணைவேந்தராக இருந்தவர் ஸர். கே. வி. ரெட்டி. இவர் பிற்காலத்தில் கவர்னராகவும் இருந்திருக்கிறார். 'ரைட் ஹானரபிள்' சீனிவாச சாஸ்திரி, ஸர். சி. பி. ராமசாமி அய்யர் ஆகியோரும் இங்கே துணைவேந்தர்களாக இருந்தவர்கள் தான்.

நான் ஈஸ்ட் பிளாக் ஹாஸ்டலில் அறை எண் 54இல் இருந்தேன். என் அறைத் தோழர் மறைந்த தலைமைச் செயலாளர் திரவியம். திரவியம், மற்றும் அவர் நண்பர்கள் சிலர் கம்யூனிஸ்ட் சித்தாந்தங்களில் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டு அந்த இயக்கத்தில் பிடிப்புடன் இருந்தார்கள். அப்போது அது தடை செய்யப்பட்ட இயக்கம். ஒரு நாள் ஆங்கிலேய போலீஸ் அதிகாரியான டிரஸ்ட்காட்டின் தலைமையில் போலீஸார் கல்லூரி விடுதிக்குள் நுழைந்து திரவியத்தையும் அவர் நண்பர்களையும் தேடுவதற்கு முனைந்தார்கள். எங்களுக்கு மகா கோபம். மாணவர்கள் ஒன்று சேர்ந்தோம். அறை அறையாகத் தேடிக் கொண்டிருந்த போலீஸ்காரர்களை ஓட, ஓட விரட்டி அடித்தோம். ஆனால், ஒரு வாரம் பொறுத்துத் திரவியத்தையும், மற்றும் ஐந்து மாணவர்களையும் (மீனாட்சி என்ற மாணவியையும் கூட) கைது செய்து விட்டார்கள். சிதம்பரம் ஸ்டேஷன் அருகில் விருந்தினர் மாளிகையில் கைது செய்யப்பட்டவர்களை வைத்திருந்தார்கள். மாணவர் படை அங்கு விரைந்தது. போலீஸ்காரர்கள் ஏற்கெனவே பழிவாங்கும் உணர்வுடன் காத்திருந்ததால், எங்களை ஓட, ஓட விரட்டி அடித்தார்கள். கல்லூரி வாசல் வரை எங்களைத் துரத்தியடித்துக் கொண்டு வந்தார்கள்.

1942இல் 'வெள்ளையனே வெளியேறு' இயக்கத்தின் எதிரொலி அண்ணாமலையிலும் கேட்டது. தினசரிப் போராட்டம், வேலை நிறுத்தம் என்று தொடர்ந்தது. கொஞ்சமும் வன்முறையின் சாயல் கிடையாது. ''பையன் போராட்டங்களில் ஈடுபடுகிறான்'' என்று என் தந்தை உட்பட, பல மாணவர்களின் தந்தையருக்குக் கடிதங்கள் சென்றன. இண்டருக்கு அப்புறம் என்னால் தொடர்ந்து அங்கு படிக்க முடியாததற்குக் காரணம், ''பையன் கெட்டு விடுவான்'' என்று என் தந்தை பயந்தது தான்!

அப்போது திராவிட இயக்க உணர்வெல்லாம் அண்ணாமலையில் இல்லை. ராமையாவும் (அன்பழகன்) நாராயணசாமியும்



• பண் நாயு



• இசைச் சகோதரர்கள் பி. வி. ராமன் — லட்சுமணன்.



• பரமகுரு



''நம்ம பேட்டை பயில்வான் குத்துச் சண்டையில் சம்பாதித்த பணத்தை வெச்சுப் படமெடுக்கப் போகிறாராம்!''

''அப்படியா? படத்தோட பெயர் என்னவாம்?''

''உதைத்து வாழ வேண்டும்!''

— குமார்.

(நெடுஞ்செழியன்) எனக்கு ஸீனியர்கள். சிதம்பரம் சுற்று வட்டாரங்களில் அண்ணா, பெரியார் பேசுகிறார்கள் என்றால் சென்று கேட்டு வருவோம்.

'தமிழ் இசை இயக்கம்' 1941இல் நடந்தது. நிறுவனர் அண்ணாமலைச் செட்டியார் தமிழ் இசையில் மிகவும் ஈடுபாடு கொண்டவராகையால் அமர்க்களமாக இசை விழாக்கள் நடந்தன. டி. கே. சி., கல்கி போன்ற பிரபல பிரமுகர்கள் வந்திருந்தார்கள். பல்கலைக் கழகத்தில் இசைக் கல்லூரியும் இருந்தது.

ஹாஸ்டலில் தங்கியிருந்தவர்கள்தான் 95 சதவிதம். மிகக் குறைவான மாணவர்களே அருகிலுள்ள சிதம்பரத்திலிருந்து தினமும் வந்து சென்றார்கள். ஏழு உணவு விடுதிகள்! அண்ணாமலைச் செட்டியார், பல்கலைக் கழக நிர்வாகம், கல்வித்தரம், விரிவாக்கம் ஆகியவைகளை மட்டுமல்ல, மாணவர்களின் உணவு போன்ற விஷயங்களில் கூட தம் கவனத்தைச் செலுத்துவார். நூலகம் பிரமிக்க வைக்கும்.

எந்த ஓர் இயக்கமானாலும் அதன் எதிரொலி அண்ணாமலையில் கேட்கும். அதற்கு முக்கிய காரணம் மாணவர்கள் எல்லோரும் ஒன்றாக விடுதியில் இருந்தது தான். கருத்துக்களைப் பரிமாறிக் கொள்வதற்கும், இணைந்து செயல்படுவதற்கும் நல்ல சூழ்நிலை அங்கு இருந்தது.

**பண்ருட்டி ராமச்சந்திரன்:**

இண்டர், மற்றும் பொறியியல் பட்டப் படிப்பை அண்ணாமலையில் முடித்தேன். தி. க., தி. மு. க. காற்று பலமாகப் பல்கலைக் கழகத்தில் வீசிக் கொண்டிருந்த காலம். என்னுடன் படித்தவர்களில் சிலர், எஸ். டி. சோமசுந்தரம், மதுரை நெடுமாறன், கணபதி ராமசுப்பையா ஆகியோர். 1958—59இல் மாணவர் பெரு மன்றத்தின் பொதுச் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டேன். ஆனால் மாணவர் மன்றத்தின் நிகழ்ச்சிகளை நடத்துவதில் பல்கலைக் கழக நிர்வாகம் சிறிதும் அக்கறை காட்டவில்லை. காரணம், அண்ணா, நெடுஞ்செழியன் என்று தி. மு. க. தலைவர்களை அழைத்து விடுவோமோ என்ற பயம்தான். பத்து மாதங்கள் கழித்து மாணவர் மன்றத்தின் சார்பில் இறுதி நிகழ்ச்சி மட்டுமே நடத்த ஏற்பாடு செய்யப்பட்டது. பிரபல விஞ்ஞானி டாக்டர். கே. எஸ். கிருஷ்ணன் சிறப்பு விருந்தினர். நிகழ்ச்சி முடிந்து, நன்றியுரை கூற நான் வந்தேன். பத்து மாதங்களாக எங்களை முடக்கி வைத்திருந்த பல்கலைக் கழகத்தின் மீது எனக்குக் கடுமையான கோபம். துணைவேந்தரையும், நிர்வாகத்தையும் ஒரு பிடி பிடித்தேன். மாணவர்கள் மத்தியில் ஏகக் கரகோஷம். வி. ஸி. முகத்தில் ஈயாடவில்லை. நான் பேசி முடித்த பின் சிறப்பு விருந்தினராக வந்திருந்த கிருஷ்ணன் என்னைக் கட்டிப் பிடித்துக் கொண்டு பாராட்டினார். இதன் பின்னர் வி. ஸி., பொறியியல் துறைத் தலைவரிடம், 'எப்படியாவது இவன் படிப்புக்கு முட்டுக்கட்டை போட முடியுமா?' என்று விசாரித்திருக்கிறார். ஆனால் நான் படிப்பிலும் சிறந்த மாணவனாக இருந்ததால் அவர்களால் ஒன்றும் செய்ய முடியவில்லை!

**இசைக் கலைஞர் பி. வி. ராமன்:**

அண்ணாமலை பல்கலைக் கழகத்தின் இசைக் கல்லூரியில் 1938இல் நான் சேர்ந்தேன். அங்கு எனக்கு ஆசானாக இருந்தவர் சங்கீத மேதை டைகர் வரதாச்சாரியார். நானும் என் சகோதரரும் டைகர் அவர்களுடன் பேராசிரியர்கள் விடுதியில் தங்கிக் கொண்டு, இசையைக் கற்றுக் கொண்டு, குரு சேவையும் செய்து கொண்டிருந்தோம். தியாகராஜர் உற்சவம் வெகு சிறப்பாக நடக்கும். பிரபல வித்வான்கள் பாட வருவார்கள். ஒரு வருடம் சம்பிரதாயப்படி டைகர் தலைமையில் 'உஞ்ச விருத்தி'க்குப் புறப்பட்டோம். சாஸ்த்திரத்துக்கு இரண்டு தெருக்கள் சுற்றி விட்டு வந்து விடுவதுதான் வழக்கம். ஆனால் அந்த வருடம் டைகர், துணைவேந்தராக இருந்த 'ரைட் ஹானரபுள்' சீனிவாச சாஸ்திரியின் இல்லத்திற்குச் சென்று விட்டார்! சாஸ்திரிக்கு ஆச்சர்யம்... 'என்ன இது...?' என்றார் ஒன்றும் புரியாமல். 'அந்தக் கிழவரின் (தியாகராஜர்) உற்சவத்துக்கு இந்தக் கிழவரை நாடி வந்தோம்'' என்று டைகர் சொன்னவுடன் சிரிப்பு அலை பரவியது. அதன் பின்னர் சீனிவாச சாஸ்திரியார் வேண்டுகோளுக்கு இணங்க, சுமார் ஒரு மணி நேரம் தியாகராஜர் கீர்த்தனைகளை எங்கள் குரு மெய்யுருகப் பாடியதை நினைக்கும் போது எனக்கு இன்றும் புல்லரிக்கிறது.

வருத்தமான சமாசாரமும் உண்டு. ஒரு முறை தியாகராஜர் உற்சவத்தின் போது, கலை, விஞ்ஞானம் படித்துக் கொண்டிருந்த மாணவர்கள், 'தமிழில்தான் பாட வேண்டும்' என்று கோஷம் போட்டது மட்டுமல்லாமல், வன்முறையிலும் இறங்கி விட்டார்கள். எங்கள் குரு டைகரை மிகவும் சிரமப்பட்டுக் காப்பாற்றி அறைக்குக் கொண்டு வந்து சேர்த்தோம்.

சந்திப்பு: **ப்ரியன்**



# வாழ்த்துகிறோம்!

தேசிய முன்னணி ஆட்சி அமைவதில் ஆரம்பத்தில் சில அசம்பாவிதங்கள் நடந்து மனத்தை உறுத்திய போதிலும் இப்போதைக்கு முடிவு சரியாக அமைந்ததில் மகிழ்ச்சி அடைகிறோம். மக்கள் காங்கிரஸை வீழ்த்த வேண்டும் என்று தீர்மானித்த அதே நேரத்தில், யார் அடுத்த பிரதமராக வேண்டும் என்று எதிர்பார்த்து வோட்டுப் போட்டார்களோ, அவரே பிரதமராகியிருக்கிறார்.

இதற்குச் சந்திரசேகர் போட்டது முட்டுக்கட்டை என்று கூறுவோரும் உண்டு; ஜனநாயக மரபுகள் செயல்படச் செய்ய வேண்டும் என்பதே அவர் நோக்கம் என்று கருதுவோரும் உண்டு. ஆனால் ஒரு சில அரசியல் சக்திகளும், பணபலம் மிக்க சில தொழிலதிபர்களும் சேர்ந்து வி. பி. சிங் பிரதமராகக் கூடாது என்பதற்காகச் செய்த சதியில் சந்திரசேகர் சிக்கினார் என்பதாகப் பேசப்படுவதுதான் மிகுந்த வேதனை அளிக்கிற விஷயமாகும். இச்சதியை முறியடிக்கவே தலைவர் தேர்தலில் ஒரு தந்திரம் கையாள நேர்ந்தது என்பதாக ஒப்புக் கொள்வோமாயினும் அதுவும் ஒரு கசப்புணர்வை ஏற்படுத்தாமல் போகவில்லை. இதற்கிடையில் ஜெத்மலானி, சந்திரசேகர் ஆதரவாளர்களால் அவர் வீட்டெதிரேயே நையப் புடைக்கப்பட்டது அனைவரும் அறிந்த வேதனை.

கசப்பான நிகழ்ச்சிகள் இத்துடன் முடியட்டும். இனி நடப்பன நாட்டுக்கு நல்லனவாக இருக்கட்டும். புதிய பிரதமர் மக்கள் முன் வைத்துள்ள செயல் திட்டம் அருமையானது. அது ஒன்றன் பின் ஒன்றாக நிறைவேறட்டும். வாழ்த்துகிறோம்.

படம்: சுபா

* குறைந்தபட்சம் ஒரு மாதம் பயிற்சி...



**இணையற்ற காப்டன் இம்ரான்!**

# பாகிஸ்தான் அணியின் வளர்ச்சியும் இந்திய அணியின் வீழ்ச்சியும்

**க**பில்தேவ் தலைமையில் பாகிஸ்தான் கிரிக்கெட் அணியை இந்திய அணி தோற்கடித்து, ப்ருடென்ஷியல் கோப்பையைப் பெற்றதைக் கிரிக்கெட் ரசிகர்கள் இன்னும் சொல்லி மகிழ்கிறார்கள். அந்த நிகழ்ச்சிக்குப் பிறகுதான் இம்ரான்கான் கங்கணம் கட்டிக் கொண்டு தமது அணியுடன் இந்தியாவுக்கு வந்தார். ஒவ்வொரு மாட்சிலும் இந்திய அணியைத் தின்றடித்தனர் பாக் ஆட்டக்காரர்கள். வெற்றி மேல் வெற்றியாக அள்ளிச் சென்ற இம்ரான், தமது அணியை வெற்றிப் பாதையிலிருந்து விலகி விடாமல் முன்நடத்திச் சென்று கொண்டிருக்கிறார். ஆனால், அன்று பாக் அணியிடம் தோற்ற பிறகு இந்திய அணிக்கு வெற்றி, எட்டியும் எட்டாமலுமே இருந்து வருகிறது... இதற்குக் காரணம் என்ன...?

ஒரு பிரபல கிரிக்கெட் வீரரைக் கேட்டோம். அவருடைய ஆதங்கம் நிறைந்த அலசலின் சுருக்கம்:

**ப**ட்டோடிக்குப் பிறகு இந்திய கிரிக்கெட் அணிக்குக் காப்டன்கள் சரியாக அமையவில்லை. பல சிறந்த ஆட்டக்காரர்கள் இப் பதவியை வகித்துள்ளார்கள்; ஆனால் அவர்களுள் யாருமே எல்லா ஆட்டக்காரர்களின் ஒட்டுமொத்தமான மதிப்பையும் பெறவில்லை. அணிக்குள்

உறுத்தல்கள், மனஸ்தாபங்களின் விளைவாகப் பிளவு இருந்திருக்கிறது. இது காவஸ்கர் தலைமை, கபில் தலைமை ஆகிய இரண்டுக்குமே பொருந்தும். ஒரு காப்டன் சிறப்பான ஆட்டக்காரராக இருப்பதோடு அணியை அரவணைத்துச் சென்று, தம் நடத்தையால் முன்னுதாரணமாக விளங்குபவராகவும் இருக்க வேண்டும். தலைமைக்கான அடிப்படைக் குணங்கள் படைத்தவர்களைத் தேடிப் பிடித்து அவர்களை அப்பதவிக்காகப் பயிற்றுவித்து, வளர்ப்பதில் நாம் தவறி விட்டோம்.

காப்டன்ஸி அம்சத்தில் பாக் அணிதான் இப்போது பெருமைப்பட்டுக் கொள்ளும் நிலையில் உள்ளது. ஆலன் பார்டர், கிளைவ் லாயிடுக்கு இணையாகச் சொல்லக்கூடியவர் இம்ரான் கான். தலைமைக்கான அடிப்படைக் குணங்களைப் பெற்றுள்ளதோடு தனிப்பட்ட முறையிலும் அற்புதமான ஆட்டக்காரர். தமது ஆட்டத்தால் தம் அணிக்கு உற்சாகமளிப்பவர். அதே சமயத்தில் ஆட்டத்தின் இடையிடையே அதன் போக்கை அனுசரித்து, அவ்வப்போது முக்கியமான முடிவுகள் எடுத்து, அதன் பயனாகத் தமது அணிக்கு வெற்றிகள் தேடித் தருவதில் வல்லவர். இம்ரானின் இத்தகைய 'திருப்புமுனை' முடிவுகளுள் சில:

●● நேரு கப் பந்தயத்தில் ஆஸ்திரேலியாவுக்கு எதிரான மாட்சில் பாகிஸ்தானின் ஸ்கோர் குறைவுதான். ஆஸ்திரேலியா இரண்டாவதாக 'பாட்' செய்து கொண்டிருந்தது. பாக் ஸ்கோரை எட்டிப் பிடிப்பது ஒன்றும் சிரமமில்லை என்ற நிலையில் இம்ரான், ஒரே ஓவரில் ஜெஃப் மார்ஷையும் ஸ்டீவன் வாவையும் தமது போலிங்கில் வீழ்த்தினார்! இந்தச் செய்கைதான் பாக் அணியைத் தூண்டி விட்டு வெற்றிக்குக் குறி வைத்து ஆடச் செய்தது.



• பட்டோடி: இவருக்கு இணையாக யார்...?

●● இதே பந்தயத்தில் இந்தியாவுக்கு எதிரான மாட்சில் அக்ரமை முன்னால் பாட் செய்ய அனுப்பினார். இந்த முடிவு மாட்சையே பாகிஸ்தானுக்குச் சாதகமாக மாற்றியது!

●● அதே போல், இறுதிப் போட்டியில் வெஸ்ட் இண்டீஸை எதிர்த்துக் கல்கத்தா

• பத்தே நாட்களுக்கு ஒரு பயிற்சி முகாம்.



இம்ரான்: நிதானமிழக்காத காப்டன்.

வில் ஆடிய போது ரமீஸ் ராஜாவும் இஜ்ஜாஸ் அஹமதும் அவுட் ஆகி, சலீமும் இம்ரானும் 'பாட்' செய்து கொண்டிருந்தனர். இந்தக் கட்டத்தில் இம்ரான் நிதானமிழந்து அவுட் ஆகியிருந்தால் வெஸ்ட் இண்டீஸ்தான் வெற்றி பெற்றிருக்கும். இம்ரானின் ஆட்டம்தான் வெற்றியை பாக் பக்கம் திருப்பியது.

நிதானமிழக்காத காப்டன்கள் விஷயத்தில்தான் இந்தியா கொடுத்து வைக்கவில்லை. ஆனால் நமது விக்கெட்டுகள் (பிட்ச்) எல்லாம் சர்வ நிதானம்! விளைவு? உலகத் தரத்து வேகப் பந்து வீச்சாளர்களை எதிர்த்துச் சர்வதேசப் பந்தயங்களில் ஆடும் போது நமது ஆட்டக்காரர்கள் திணறுகிறார்கள். 'தலைகுனி'கிறார்கள்!

வேகப் பந்து வீச்சுக்குச் சாதகமான விக்கெட்டுகள் இல்லாததால் ஃபாஸ்ட் பௌலர்களும் இங்கு வளர முடிவதில்லை.

இந்தக் குறைகளை நிவர்த்தி செய்ய இந்திய கிரிக்கெட் நிர்வாகம்தான் முன்வர வேண்டும். இதுவரை இந்தத் திக்கில் மனப்பூர்வமான முயற்சிகள் ஏதும் எடுக்கப்பட்டதாகத் தெரியவில்லை. டெஸ்ட் பந்தயங்களின் போது மட்டுமே நிர்வாகத்திடம் காணப்படும் பரபரப்பும் சுறுசுறுப்பும் வருடம் முழுவதும் அணியை வளர்ப்பதிலும் உலகத் தரத்துக்கு நிகரான பிட்சுகள் மற்றும் இதர ஆட்ட வசதிகள் வழங்குவதிலும் காணப்பட்டால் எவ்வளவோ சிறப்பாக இருக்கும்!

பாக் அணியின் பாட்ஸ்மென் சமீபத்துப் பந்தயங்களில் ஆடியதைப் பார்த்தவர்கள் யாவருமே, அவர்கள் வேகமான பிட்சுகளில் விளையாடிப் பழகியவர்கள் என்பதை எளிதில் கூறி விடுவார்கள்.

ஆட்டக்காரர்களைத் தேர்வு செய்வதிலும் அணியிலிருந்து நீக்குவதிலும் இன்னும் சற்று நிதானம் கடைபிடிக்கப்பட வேண்டும். திடீரென்று இரண்டு மூன்று பழைய ஆட்டக்காரர்களைக் கழித்துக் கட்டிவிட்டுப் புதிய ஆட்டக்காரர்களைப் புகுத்துவதைக் காட்டிலும் படிப்படியாக இதைச் செய்வது நல்லது. உதாரணமாக, இப்போது புது ஆட்டக்காரர்கள் இருவரைப் புகுத்தியுள்ள நிர்வாகம் இதே காரியத்தை மூன்று நான்கு வருடங்களுக்கு முன்னரே செய்திருக்க வேண்டும். புது ஆட்டக்காரர்களுக்கு ஓரிரு மாட்சுகளில் சந்தர்ப்பம் கொடுக்க வேண்டும். அந்த மாட்சுகளில் அவர்கள் சரியாக ஆடா விட்டால் நீக்கி விட்டு இடைவெளி தந்து மீண்டும் ஓரிரு மாட்சுகளில் வாய்ப்புத் தர வேண்டும். ஒரு வலுவான அணியில் விளையாடி, வெற்றியை ருசித்து விட்டால் அவர்களுக்கு அபரிமிதமான தன்னம்பிக்கை பிறக்கும். அதே சமயத்தில் பழைய ஆட்டக்காரர்களும் அவ்வப்போது தங்கள் இடத்தைப் புதிய ஆட்டக்காரருக்கு விட்டுக் கொடுக்க வேண்டிய கட்டாயத்தில் இருப்பதால் அணியில் தங்கள் இடம் உறுதியில்லை என்ற எச்சரிக்கையுடன் எப்போதுமே சிறப்பாக ஆட முயற்சி செய்வார்கள்.

இரண்டு மூன்று மாட்சுகளில் ஆடிப் பெயரெடுத்து விட்ட ஆட்டக்காரர்கள் பழைய பெருமையில் குளிர் காய்வதன் விளைவாக அணியில் தொடர்ந்து நீடிப்பது ஆரோக்கியமான போக்கு அல்ல. இது அணியைப் பலவீனமாக்குவதோடு அணியினரிடையே மனக்கசப்பை ஏற்படுத்தி ஒற்றுமையைக் குலைக்கும். இன்று கிரிக்கெட்டில் ஏராளமான பணமும், புகழும் சம்பாதிக்க முடிகிறது என்பதால், அரசியலில் பதவியைக் காப்பாற்றிக் கொள்வது போல் கிரிக்கெட் உலகிலும் 'இடத்தைத் தக்க வைத்துக் கொள்வது' என்பது குறிக்கோளாகி வருகிறது.

பழைய பெருமையின் அடிப்படையில் மட்டுமே ஓர் ஆட்டக்காரரைத் தொடர்ந்து

# இதோ! பிரிமியர் ஹவுஸிங் கம்பெனியின் பங்குதாரர் என்ற முறையில் நீங்கள் பெறலாம் சில சிறப்புரிமைகள்!



**இப்பொழுதே, முதன்முதலாக பங்குகளை வாங்கினால், முன்னுரிமை முறையில் வீடு ஒதுக்கீடு; வீட்டின் விலையில் 2.5% தள்ளுபடி.**

| உங்கள் பங்குகள் | தள்ளுபடி |
|---|---|
| 200 | 1.0% |
| 250-300 | 1.5% |
| 350-500 | 2.0% |
| 500-க்கு மேல் | 2.5% |

ஆம்: செழிப்பான டிவிடெண்டோடு இப்படி சில சிறப்புரிமைகளையும் உங்களுக்குத் தருகிறது, பிரிமியர் ஹவுஸிங் பங்கு முதலீடு. இன்று அதிகபட்ச இலாபம் ஈட்டும் தொழில் வீடுகட்டும் தொழில்தான். இந்தியாவில் வீடு கட்டுவது தொடர்பான எல்லாப் பணிகளையும் அளிக்கும் பப்ளிக் லிமிடெட் கம்பெனி, பிரிமியர் ஹவுசிங் மட்டுமே! எனவே, உங்கள் பிரிமியர் ஹவுஸிங் பங்குகள் மிகமிக இலாபகரமான ஓர் முதலீடு.

இன்றே உங்கள் பங்குகளை வாங்குங்கள். கனரா வங்கி, பாரத ஸ்டேட் வங்கி அல்லது முக்கியமான புரோக்கர்களிடமிருந்து விவரங்களைப் பெறுங்கள்.

---

**இஷ்யு துவக்கம்:**
**டிசம்பர் 15, 1989.**
ஒவ்வொன்றும்
ரூ 10/- மதிப்புள்ள
18,00,000 ஈக்விடி பங்குகள்.

---

பிரிமியர் ஹவுஸிங் அளிக்கும்






பிரிமியர் ஹவுஸிங் அண்ட் இண்டஸ்ட்ரியல் எண்டர்பிரைசஸ் லிமிடெட்
5-C சாந்தி டவர்ஸ்
58 லஸ் சர்ச் சாலை
சென்னை 600 004

**உங்கள் இல்லம் செழிக்க ஓர் இனிய முதலீடு!**

R K SWAMY/PH/7585

# 'என் பிளேபாய் இமேஜ்!'

— இம்ரான்கான்



இம்ரான் கானின் சுயசரிதை: 'இம்ரான்'. இதிலிருந்து சில பகுதிகள்:

** கிரிக்கெட் எங்கள் குடும்பத்தைப் பொறுத்த வரை ரத்தத்தில் ஊறிப் போன விஷயம். என் தாய் வழியில் எட்டுப்பேர் முதல் தரமான கிரிக்கெட் ஆட்டக்காரர்கள். என் அம்மா, மற்றும் இரண்டு சித்திகளுமாய் மூன்று பாகிஸ்தானிய காப்டன்களைப் பெற்றெடுத் திருக்கிறார்கள்!

** சிறுவனாக இருந்த போது என்னை, ஆட்டத் தில் சேர்த்துக் கொள்ளவே மாட்டார்கள். சான்ஸ் கொடுத்தாலும், என்னை அவுட் ஆக்க ஓரிரு பந்துகளே போதுமானதாய் இருக்கும். ''நான் ரெடியாவதற்கு முன்பே பந்து வீசிவிட்டீர்கள்; நான் அவுட் ஆக வில்லை; ஒப்புக் கொள்ள மாட்டேன்'' என அடம் பிடிப்பது எனது அன்றாட வாடிக்கை!

** வேலைக்காரர்களைப் பந்துவீசச் சொல்லி, கிரிக்கெட் ஆடிக் கொண்டே இருப்பேன். பந்து வீசுபவர்கள் களைத்துப் போய் விடு வார்கள். இருட்டிய பிறகும் வீட்டுக்குள் ளேயே கிரிக்கெட் ஆடுவேன். நான் உடைத்த கண்ணாடிகள் கணக்கிலடங்கா. எனக்குப் பந்துவீசப் பயந்து கொண்டே, இரண்டு வேலைக்காரர்கள் வேலையை விட்டுவிட்டு ஓடிப்போய் விட்டார்கள்!

** லாகூரில் பட்டம் விடுவது குளிர்காலத்தில் பிரபலமான பொழுதுபோக்கு. இதுதான் என் தசைகளைப் பலமாக்கி, உடல் வலிமை யைப் பெருக்கியது. பட்டங்களைப் பறக்க விட்டபடி, ஒரு மைல் தூரம் வரை ஓடுவேன். சுவர் மீது அனாயாசமாய் ஏறிக் குதிப்பேன். இவை என் கால்களையும், கைகளையும் பலப் படுத்தி, என்னை ஒரு திறமையான வேகப் பந்து வீச்சாளனாக உருவாக்கி வந்ததை நானே உணர்ந்திருக்கவில்லை!

** சிறுவயது முதலே நான் அழகற்றவன் என் கிற தாழ்வு மனப்பான்மை எனக்கு உண்டு. அதனால் இன்று பத்திரிகைகள் 'செக்ஸ் சிம்பல்' என்று என் பர்சனாலிடியை விமர் சிப்பது எனக்கு வேடிக்கையாய் இருக்கிறது. நான் யாரையாவது பாராட்டினாலோ, அல் லது பரிசு கொடுத்தாலோ அது தவறாகப் புரிந்து கொள்ளப்படுகிறது. நான் திருமண மாகாதவன் என்பதால் என்னைப் பற்றி விதம் விதமான கிசுகிசுக்கள் உருவாகி, பத்திரிகை களில் இடம் பெறுகின்றன.

தொகுப்பு: எஸ். சந்திரமௌலி.

அணியில் நீடிக்க விடாமல், ஆட்டக்காரர் கள் தேர்வில் சிரத்தை காட்டுவதில் பாகிஸ் தான் வெற்றி கண்டுள்ளது.

**பா**க் அணியை நாம் முன்னுதாரண மாகக் கொள்ள வேண்டிய இன்னோர் அம்சம் அணியினரின் ஆரோக்கியத்தைப் பேணுவது. அயல் நாட்டு டூருக்கு முன்னர் குறைந்தபட்சம் ஒரு மாத காலத்துக்குப் பாக் அணியினர் ஒரே இடத்தில் தங்கி உடற் பயிற்சி மற்றும் ஆட்டப் பயிற்சிகளில் ஈடுபடுகிறார்கள். எல்லா ஆட்டக்காரர் களும் சீரான உடல் ஆரோக்கியம் பெற்றுள் ளார்கள். ஒரு மூத்த ஆட்டக்காரர் தம் அனுபவம் அல்லது ஆற்றலைக் காரணம் காட்டிக் கடும் பயிற்சியிலிருந்து விலக்குப் பெறவே முடியாது. எல்லோருமே, ஆட்டத் தில் தேர்ச்சி பெறவும் திடகாத்திரமான உடலைப் பெறவும் தொழில் ரீதியான பயிற்சியாளர்கள், மற்றும் Physiotherapist களின் மேற்பார்வையில் பயிற்சி பெறு கிறார்கள்.

இந்தியப் பயிற்சி முகாமோ பத்தே நாட்களுக்குத்தான். சூடு பிடிப்பதற்குள் முடிந்தே போய் விடும். இந்த முகாம்கள் வெறும் கண் துடைப்பாகத்தான் இருக்க முடியும். இதில் எந்த ஆட்டக்காரருக்காவது அடிபட்டால் பத்து நாள் முகாமில் ஒரு வாரம் அல்லது ஐந்து நாட்களுக்குத்தான் அவர் பயிற்சிகள் செய்வார்.

மேலும் இந்தியாவின் பல மாநிலங் களிலிருந்தும் வரும் ஆட்டக்காரர்கள் தங்கள் மாநிலங்களிலுள்ள உடற்பயிற்சி வசதிகளுக்கு ஏற்பத்தான் ஆரோக்கியம் பெற்றிருப்பார்கள். எல்லா மாநிலங்களி லும் ஒரே சீரான, விஞ்ஞான ரீதியான பயிற்சி வசதிகள் செய்து தரப்பட்டால் எல்லா ஆட்டக்காரர்களும் சீரான உடல் நிலை பெற்றுச் சிறப்பாக ஆடும் வாய்ப்பு கள் அதிகரிக்கும். இந்தத் திசையில் நாம் உடனடி கவனம் செலுத்த வேண்டிய கட்டா யத்தில் இருக்கிறோம்.

— நமது நிருபர்கள்

வண்ணப்படம், மற்றும் படங்கள்: சாரி




ஒரு செயலில் நாம் வெற்றிபெற வேண்டுமென்றால், அச் செயலில் நாம் காட்டும் ஆர்வத்தைப் பொறுத்துத்தான் நமது செயல் வெற்றி பெறுகிறது என்பது உங்களுக்குத் தெரியும்.

உதாரணமாக, ஆங்கிலத்தில் சரளமாகப் பேசவேண்டும் என்ற ஆர்வம் தற்போது எல்லோரிடமும் காணப்படுகிறது.

ஆனால்.......

நம்மால் ஆங்கிலத்தில் பேச முடியுமா என்ற சந்தேகம்,

ஆங்கிலத்தில் பேசினால் ஏதாவது தவறாகப் பேசிவிடுவோமோ என்ற தயக்கம்,

பல வழிகளில் முயன்றும், பல புத்தகங்களைப் படித்தும் நாம் எதிர்பார்த்த முன்னேற்றம் ஏற்படவில்லையே என்ற சலிப்பு

இது போன்ற சிறு, சிறு தடைக்கற்கள்தான் நம்முடைய ஆர்வத்திற்கு அணைபோட்டு விடுகின்றன.

நாமே நம்முடைய ஆர்வத்திற்கு அணைபோடலாமா?

தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்ற தனிப்புகழ் பெற்ற விவேகானந்தா கல்வி நிலையத்தினர் அளிக்கும் ஓர் எளிய பயிற்சியை மேற்கொண்டால் இலக்கணப் பிழையின்றி கடிதங்கள், கட்டுரைகள் எழுதவும், தவறாகப் பேசி விடுவோமோ என்ற தயக்கம் நீங்கி ஆங்கிலத்தில் சரளமாகப் பேச உங்களால் முடியும்.

வீட்டிலிருந்த படியே ஓய்வு நேரத்தில் தமிழில் தபால் மூலம் இப்பயிற்சியை நீங்கள் மேற்கொள்ளலாம். "நேர்முகப் பயிற்சியும் உண்டு"

இப் பயிற்சியில் சேர்ந்து பயன் பெறவேண்டும் என்ற உங்களது விருப்பத்தை ஒரு போஸ்ட் கார்டில் எழுதி கீழ் கண்ட முகவரிக்கு அனுப்புங்கள்.

இப் பயிற்சியில் சேருவதற்கான விண்ணப்பமனுவையும், மற்ற விவரங்களையும் உடனே அனுப்பி வைக்கிறோம்.

நீங்கள் தொடர்புகொள்ள
வேண்டிய முகவரி

**விவேகானந்தா கல்வி நிலையம்**
9, மேட்லி ரோடு, தி.நகர்,
சென்னை 600 017.

NAGA


ராஜீவே தலைவர்.. ஜெயஹயா.
என்றென்றும் தலைவர்!
ஜெயஹயா!
காங்கிரஸ் கட்சி
ஆட்சி


கூட்டணி அரசு
அமைக்கும் முயற்சி!
GUM


கருணாநிதியே...
ராஜிநாமா செய்!
கருணாநிதியே
ராஜிநாமா செய்!



# கல்கி

1989 டிசம்பர் 10
மலர் 48 இதழ் 19
சுக்ல கார்த்திகை 25




# தேர்தல் கற்பிக்கும் பாடங்கள்

பாடப் புத்தகங்கள் எவ்வளவோ உள்ளன. ஆனால் கற்றுக் கொள்ள ஆசை இருந்தால்தானே பாட நூல்கள் பயன்படும்? அதுபோலத்தான் தேர்தல் முடிவுகளும். அறிந்து கொள்ள விரும்புவோர் எத்தனையோ பாடங்களைப் புரிந்து கொள்ளலாம்.

காங்கிரஸ் என்பது, நமக்குச் சுதந்திரம் பெற்றுத் தந்த உன்னதமான தலைவர்களைக் கொண்டிருந்த மகத்தான கட்சி. அது இன்றைக்கு உள்ள நிலைமை நெஞ்சை உருக்குவதாக இருக்கிறது. காரணம் என்ன? கட்சிக்குள் ஜனநாயகம் அச்சமின்றிச் செயல்படாததுதான்! அது செயல்பட்டிருந்தால் ராஜீவ் காந்தி என்றோ தூக்கி எறியப்பட்டிருப்பார். கட்சி, புதிய தலைமையின் கீழ் புத்துயிர் பெற்றுத் தழைத்திருக்கும்; ஆட்சியிலும் நீடித்திருக்கும். ஆனால் ஒரு தனி மனிதனின் மூடப்பிடிவாதத்தையும் யதேச்சாதிகாரத்தையும் அந்தக் கட்சி அனுமதிக்கப் போக, அது இன்று அதள பாதாளத்துக்குச் சரிந்து விட்டது. இன்னமும் கூட காங்கிரஸ்காரர்கள் ராஜீவ் காந்தியின் தலைமையை ஏற்றுக் கொண்டு பேசுவதைப் பார்க்க வியப்பாக இருக்கிறது! இவர்களுக்கு முதுகெலும்பே இல்லையோ என்று எண்ண வைக்கிறது!

போஃபர்ஸ் ஊழலும், அதைப் பூசி மெழுக ராஜீவ், ஒன்றன் பின் ஒன்றாகக் கூறி வந்த பொய்யுரைகளும், எதிர்க்கட்சித் தலைவர்கள் மீது அநியாயமாகச் சேறு பூச முயன்ற கொடுமையும் ஒருபுறமிருக்கட்டும். தேர்தலுக்கு முன், நன்னடத்தை விதிமுறைகளை மீறி, 'இந்திரா மகிள யோஜனா' போன்ற ஒரு மகளிர் நல்வாழ்வுத் திட்டத்தை ஆண்டொன்றுக்கு 5000 கோடி செலவில் அமல்படுத்தப் போவதாகக் கூறக்கூடாது என்பது கூடவா ஒரு பிரதமருக்குத் தெரியாது? அதுதான் போகட்டும் ,எனில், தமது வெற்றி உறுதி என்ற நிலையிலும் தமது தொகுதியில் வோட்டுச் சாவடிகளில் தில்லுமுல்லுகளையும், குண்டர்களின் வன்முறைகளையும் அவர் அனுமதித்து, கண்டும் காணாதது போல் இருந்திருக்கலாமா? இவற்றுக்காகத் தேர்தல் கமிஷனின் கண்டனங்களை ஒரு நாட்டின் பிரதமர் பெறுவதென்பது, அந்த நாட்டுக்கே தலைகுனிவு அல்லவா? இத்தகைய ஒருவரை ஒரு கட்சி, தனது தலைவராகத் தொடர்ந்து ஏற்பதா? காங்கிரஸின் எதிர்காலத்தில் அக்கறை கொண்ட காங்கிரஸ்காரர்கள் சிந்திக்க வேண்டிய விஷயம் இது.

எதிர்க்கட்சிகளுக்கும் (இனி ஆளப் போகும் கட்சிகள்) இந்தத் தேர்தல் பல பாடங்களை உணர்த்துகிறது. அவற்றுள் தலையாய விஷயம் லஞ்ச ஊழலையும் பொய் புனைந்துரைகளையும் மக்கள் மன்னிக்கவே மாட்டார்கள் என்பது. நீங்கள் எச்சரிக்கையாக இல்லாது போனால், இன்று காங்கிரஸுக்கு நேர்ந்தது நாளை உங்களுக்கும் நடக்கும். இரண்டாவது, உங்களுடைய ஆட்சியில் நாளைக்கே குபேரர்களாகிவிடப் போகிறோம் என்று இங்கு யாருமே கருதவில்லை. உங்களுக்கு வோட்டுப் போட்ட மக்களுடைய எதிர்பார்ப்பு குறைந்தபட்சமானது. விலைவாசிகள் உயரக்கூடாது; வேலை வாய்ப்புக்கள் பெருக வேண்டும்; இந்நாட்டின் பெரிய பலம் மக்கள் பலமே என்பதைப் புரிந்து கொண்டு, அதனைத் திறம்படப் பயன்படுத்திக் கொள்ள ஏற்ற திட்டங்களை நீங்கள் வகுக்க வேண்டும். குழந்தைகளுக்கு வாழ்க்கையைச் சந்திக்க உதவும் தரமான கல்வி வேண்டும். வறுமையும் நோயும் மக்களை வாட்டாமல் இருக்க வேண்டும். இவ்வளவுதான். இவற்றைச் செய்து தர நீங்கள் ஒற்றுமையாகச் செயலாற்றி, நல்ல பொருளாதாரக் கொள்கைகளைக் கடைப்பிடித்து, சிறந்த விவசாயத் தொழில் வளர்ச்சித் திட்டங்களை வகுத்து அமல்படுத்துவீர்கள் என்று நம்பிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களை இவ்விஷயத்தில் நீங்கள் கைவிட்டு விட்டால் — உங்களிடையே ஒற்றுமை குலைந்தால் — அவர்களுடைய சீற்றம், இன்று காங்கிரஸ் மீது பாய்ந்ததைவிட அதிக உக்கிரமாக உங்களைத் தாக்கும்!

நாட்டின் சுபிட்சம் என்பது லோன் மேளாக்களிலோ, பல்வேறு யோஜனாக்களில் கணக்குப் பார்க்காமல், கோடி கோடியாகப் பணத்தை வாரிவிடுவதிலோ, இதர இலவசங்களிலோ இல்லை. இவை பண வீக்கத்தையும் விலைவாசி உயர்வையுமே உண்டாக்கும். சிறு நகரங்களைச் சுற்றி, கிராமப் புறங்களில் அதிகரிக்கின்ற சிறு தொழில்களில் பெருகுகின்ற வேலை வாய்ப்புக்களில்தான் சுபிட்சம் இருக்கிறது. இதற்கு அடித்தளம் அமைப்பதிலும் விவசாய வளத்திலும் கவனம் செலுத்துங்கள். வரிப் பணத்தைச் செலவிடுவதில் சிக்கனம் காட்டுங்கள். மக்களை எளிதில் மகிழ்விக்கலாம்.

தமிழ்நாட்டில் நடந்த நாடாளுமன்றத் தேர்தல் முடிவுகளை ஒட்டுமொத்தமான நாடாளுமன்றத் தேர்தல் முடிவுகளுடன் இணைத்துப் பார்த்தால், இங்கு அ. தி. மு. க., காங்கிரஸ், தி. மு. க. ஆகிய முத்தரப்பினரும் பெறக் கூடிய பாடம்: அடக்கம். கர்வத்துக்கும், தனி நபர் ஆணவத்துக்கும் விடைகொடுத்து அனுப்பிவிட வேண்டும். இன்று இதைப் புரிந்து கொள்ளா விட்டால் நாளை பரிதாபம்தான்!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

வட்ட மேஜை

# பெண் இனத்திற்கே பெருமைதான்!

* ஆங்கிலப் பத்திரிகை படிக்கும் வழக்கம் இல்லாதவர்களும், போஃபர்ஸ் பற்றி அரைகுறையாக மட்டுமே தெரிந்தவர்களும் நன்றாகப் புரிந்து கொள்ளும்படி அமைந்திருந்தது போஃபர்ஸ் ஊழல் பற்றிய என். ராம் அவர்களின் பேட்டிக் கட்டுரை.

திருச்சி — 2, என். சம்பத்.

* ஹிந்து, என். ராம், போஃபர்ஸ் ஊழல் குறித்துக் கூறிய ஐந்து கட்ட பதில்கள் பொறுப்பாகவும், சாதுரியமாகவும், அதே சமயத்தில் தெள்ளத் தெளிவாகவும், சிந்தனையைத் தூண்டும் விதத்திலும் அமைந்திருந்தன. இதில் 'சித்ரா' பணி சிறப்பாக அமைந்தது பெண்ணினத்திற்கே பெருமைதான்.

புதுவை — 3, சோலைநகர் என். கே. வேலு.

* தலையங்கம் தெளிவாகவும், விளக்கமாகவும், தைரியமாகவும் பளிச், பளிச்சென்று கல்கி முத்திரையுடன் பிரகாசித்தது. பாராட்டுக்கள்.

கம்பம், செ. வைப்ரரிகண்ணன்.

* 26.11.89 கல்கியில் வெளியான 'வாக்காளரின் முதல் கடமை' தலையங்கம் கண்டேன். கல்கியின் தலையங்கத்தைக் கொளுத்தி அனுப்பிய நபருக்கு எப்படி விலாசம் எழுதத் துணிவில்லையோ அதே போல்தான் காங்கிரஸ் கட்சிக்கு வாக்காளர்களைச் சந்திக்கத் துணிவில்லாமல் பணத்தையும், எதிர்க் கட்சிகள் மீது குற்றச்சாட்டுக்களையும் வாரி இறைத்தது.

தாடிக்கொம்பு, வெ. துரைராம் பிரசாத்.

* சிந்தனையைத் தூண்டி, எழுச்சியுடன் செயல்பட உதவின சாய்பாபாவின் கருத்துக்கள். தொடர்ந்து இதுபோன்ற பெரியவர்களின் பயனுறு கட்டுரைகளை வெளியிட்டு இளைஞர்களை நல்வழியில் நடத்திச் செல்லுங்கள்.

கும்பகோணம், கவிட் ரவி.

* ''பாச மழை'' விமர்சனம் பாகுபாடின்றி இருந்தது! மசாலா அதிகம் விசாத சைவப் படம் எனப் பாராட்டில் தொடங்கி, கதையில் உள்ள ஓட்டைகளை வரிசைப்படுத்தி, கலைஞரின் வசனங்களில் இலக்கிய நயங்கள் திரைப்படத்திற்கும் நமக்கும் இருக்க வேண்டிய நியாயமான நேசத்துக்குத் தடுப்புச் சுவர் என்ற உயரிய உண்மை உறைக்காமையைக் கண்டித்து, முதல்வர் பெண்களுக்காக அளிக்கும் சலுகைகள் என்ற விளம்பர யுக்தியைச் சாடி... கல்கியின் விமர்சனப் பார்வையைத் தனிமைப்படுத்திக் காட்டியது!

''வோட்டுக்கு எவ்வளவு உத்தேசமாக?'' — கருத்துப் பொதிந்த கவிதை வரிகள்! கவிஞரின் இதயக் கொதிப்பை இம்மியும் குறையாமல் நம் கண் முன்னே கொண்டு வந்து நிறுத்தி விட்டார் ஓவியர் மருது. பாராட்டுக்கள்!

குடியாத்தம், ஏ. உமாசங்கர்.

* இன்பத்தில் மட்டுமல்ல, துன்பத்திலும் கணவன்—மனைவி இருவருக்கும் சம பங்கு உண்டு என்பதை ஒரு சிறிய இரண்டு பக்கக் (சுகமான வலிகள்) கதை மூலம் தெளிவாக்கியுள்ளார் ராஜ்கோகுல். பாராட்டுக்கள்.

நெய்வேலி — 3, சந்திரமாலா உத்தண்டராமன்.

* ஓர் ஆசிரியன் என்ற முறையில் என்னுள் ஆழ்ந்த பாதிப்பை ஏற்படுத்தியது கமலா கந்தசாமியின் சிறுகதை. நல்லாசிரியர் விருதுகளும், ஆய்வு அதிகாரிக்கு விருந்துகளும், சொந்த ஏரியாவிற்கு மாற்றங்களும் அன்றாடம் நடைபெறுகின்றன. கலைமகள் கொலுவிருக்க வேண்டிய கல்விக்கூடங்களில் கண்டவையெல்லாம் 'குடி'யிருக்கின்றன. இடித்துக் காட்டினாலும், அடித்துச் சொன்னாலும் காதில் விழப் போவதில்லை. தேவை ஒரு சமுதாய விழிப்புணர்வு. அது கனவுதானோ என்று தோன்றுகிறது. இன்றுள்ள நிலையைப் பார்க்கும் போது.

திருமங்கலம், வீ. ஆர்.

* பெரியசாமியின் அதிரடி வாக்குமூலம் அந்த சாட்சாத் ஆதிமூலத்தையே அசத்தியிருக்குமே!

பொன்மலைப்பட்டி, பி. அற்புதசாமி.

* தங்கக் கடத்தல் கும்பலைப் பிடிப்பதைக் 'கடமை, கண்ணியம், கட்டுப்பாடு' கதையில் நேரில் பார்ப்பதைப் போன்ற திரில்லுடன் சித்திரித்துக் காட்டியுள்ள கதாசிரியர் ஆல்பர்ட் இக்னேஷியஸ் — அறிமுக எழுத்தாளர் என்று நம்ப முடியவில்லை. அனுபவம் உள்ள எழுத்தாளர் போல் எழுதி இருக்கிறாரே — பாராட்டுக்கள்.

டாக்டரைப் பற்றி மரண வாக்குமூலம் கொடுத்து ராஜ மரியாதை பெறும் பெரியசாமி பலே கில்லாடிதான். சந்திரஹரியின் கதை சிரிக்கவும் சிந்திக்கவும் வைத்தது.

தர்மபுரி, அவைநாயகன்.

* வெற்றி விழா படவிமர்சனத்தில் (26.11.89 இதழ்) பழசையெல்லாம் மறந்து போவதை இன்ஸோம்னியா என்று குறிப்பிட்டிருக்கிறீர்களே! இது தவறு. பழசை மறந்து போவதென்பது அம்னீஷியா ஆகும். இன்ஸோம்னியா என்பது தூக்கத்தில் நடப்பது. எழுதும் போது கவனித்து எழுதுங்கள்!

சென்னை — 20, உமா ஸ்ரீதரன்.

(ஸாரி, ஆனால் நீங்களும் தவறுதான் செய்து விட்டீர்கள்! இன்ஸோம்னியா என்பது தூக்கத்தில் நடப்பது அல்ல: தூக்கமின்றித் தவிப்பது. தூக்கத்திலேயே நடப்பது அல்லது வேறு காரியங்களைச் செய்வதற்குப் பெயர் ஸோம்னம்புலிஸம்!

— ஆசிரியர்)

* ''இலங்கை அரசின் ''நாட்டு நலன்'' என்ற நோக்கம் நிறைவேறுமானால் இந்தச் சதியை மன்னித்து விடலாம்!'' — தராகவின் இந்தப் பதில் மன்னிக்க முடியாதது. Machiavelli என்ற இதாலிய அரசியல் தத்துவ அறிஞரின் இந்தத் தவறான கருத்தை உலகம் குழிதோண்டிப் புதைத்து எவ்வளவோ காலம் ஆகி விட்டது. தராக இப்படி ஒரு பதிலைக் கொடுத்து 'End justifies the means' என்ற அபத்தத்தை நியாயப்படுத்துவது, தராக போன்ற Intellectuals செய்யக் கூடியது அல்ல.

கோலார், வின்சென்ட்.

# சங்கீத நாயனார்



○○ காஞ்சிபுரம் நாயனாப் பிள்ளையவர்களின் இறுதி நாட்களில் இல்லாமை அவரை இறுக்கியது. வயலின் சௌடையாவும், மிருதங்கம் தக்ஷிணாமூர்த்திப் பிள்ளையும் அப்போது அவரிடம் வந்து. ''நாங்கள் இரண்டு பேரும் பக்கவாத்தியம் வாசிக்க நீங்கள் ஒரு ஸெட் ரெகார்ட் கொடுங்கள். வாரி விடலாம் வாரி!'' என்றார்கள்.

''மன்னிக்கணும்'' என்றார் நாயனா. ''ரெகார்ட் நேரத்துக்குச் சரிக்கட்டும்படி மூணு நிமிஷத்திலும் ஆறு நிமிஷத்திலும் வித்தையைக் குறுக்கி குரு துரோகத்துக்கு ஆளாக மாட்டேன், சாமிங்களே!'' என்று கை கூப்பி விட்டார், முடிந்த முடிவாக!

○○ அந்த குரு யார்? யாருக்குமே அவர் பெயர் தெரியாது. 'யாரோ ஒரு சந்நியாசி' யாகவே காஞ்சியில் சஞ்சரித்தவர் அவர். ஆனால் யாருக்கும் தெரிந்திராத லய மர்மங்களெல்லாம் தெரிந்து வைத்துக் கொண்டிருந்தார். எதனாலோ நாயனாவைச் சீடராக்கிக் கொண்டு அவருக்கே அந்தத் தாள நுட்பங்கள் யாவற்றையும் புகட்டினார். தக்ஷிணையாகத் தாம் ஓர் உத்தரீணிப் பால் கூட அளிக்க அனுமதிக்காத அதிசய குரு என்று அவரைப் பற்றி இதயம் கனிந்து நாயனாப்பிள்ளை சொல்வார்.

○○ சிதம்பரத்தில் நாயனாப்பிள்ளை கச்சேரி. நாகஸ்வர மன்னரான சிதம்பரம் வைத்தியநாதப் பிள்ளை அவருக்குக் கஞ்சிரா வாசித்துக் கௌரவப்படுத்தினார். அதோடு வெளிப்படவும் கௌரவிக்கத் தீர்மானித்துப் பட்டம் கொடுக்க முற்பட்டார். ''இந்த பூலோக கைலாஸத்துக்கு வந்த பின் இங்கே பட்டம் வேறே வாங்கிக் கொள்ளவா? நடராஜனருள் என்றும் தக்கி நிற்கணுமென்று வாழ்த்தியனுப்புங்கள். அதைவிட எதுவும் வேண்டாம்!'' என்றார் நாயனாப்பிள்ளை.

○○ காஞ்சிபுரத்தின் இசைக் குடும்பம் ஒன்றில் மூன்று அன்னைகளுக்கு ஒரே பிள்ளையாக ஒரு சுப்பிரமண்யம் பிறந்தார். அன்னை, பெரியன்னை, சிற்றன்னை ஆகிய மூவருக்கும் ஏக புத்ரராகி அவர்களின் செல்ல அழைப்பில் 'நாயனா' ஆனார். சியாம சாஸ்திரி கிருதிகளைத் ''தாத்தா வீட்டுச் சொத்து'' என்று உரிமை கொண்டாடிய குடும்பம் அது. அதாவது அந்த ஸங்கீத மஹானீயருடைய நேர் சிஷ்ய பரம்பரை. ஆனால் வாலிபப் பருவம் வரையில் நாயனாவுக்கு இசையில் ஈடுபாடு இல்லை! தேகாப்பியாசம் செய்து குஸ்தி பயில்வான் ஆனார்! தற்செயலாக ஒரு நாள் கோனேரி ராஜபுரம் வைத்யநாதையரின் இசையை நாயனா கேட்க நேர்ந்தது.

அடுத்த வாரம்:



# கலைவிழா சிறப்பிதழ்



- சிவசங்கரி எழுதும் சிறப்புச் சிறுகதை: வட்டங்கள்
- என் குருவைத் தேர்ந்தெடுத்தது ஏன்?
  — இளம் கலைஞர்கள் பேட்டி
- சிரிப்புக் கச்சேரிகள்!
  — கலை நிகழ்ச்சிகளுக்குச் சென்ற போது நடந்த தமாஷ்
- சந்தானம் — செம்மங்குடி சந்திப்பு:
  — மகாராஜபுரம் மகிமைகள்
- இந்த வருஷம் என்ன ஸ்பெஷல்?
- குன்னக்குடியின் வாசிப்பு: வித்வத்தா? வித்தையா?
  — இசைப் பிரியர்களிடையே ஒரு விவாதம்!





[redacted]

உடனே அவர் இரத்தத்தில் கலந்திருந்த இசை ஆர்வம் சிலிர்த்து எழுந்தது. 'நாமும் ஸங்கீத வித்வானாக வேண்டும். சாதாரண வித்வானாக அல்ல. இந்தக் கோனேரி ராஜபுரத்தார் மாதிரியாக்கும்' என்று தீர்மானித்தார். குஸ்திச் சண்டையை விட்டுப் பாட்டுப் பயிற்சி செய்தார். மெய்யான தாபமும் முயற்சியும் இருந்தால் குறிக்கோளில் சேர்க்கக் குருநாதன்தானே குதிப்பான் என்ற சாஸ்திர வாசகம் மெய்யாயிற்று. அநாமதேய சந்நியாஸி நம் நாயனாவை ஆட்கொண்டு அவரை இசை மேதையாக மலர்வித்தார்!

OO குரு என்றே இவரொருவர்தான் என்று நாயனாப் பிள்ளை குறுக்கிக் கொண்டு விடவில்லை. பெரிய தாயார் தனகோடியம்மாள், கோனேரிராஜபுரத்தார், எட்டையபுரம் ராமசந்திர பாகவதர், மலைக்கோட்டை கோவிந்தசாமிப் பிள்ளை என்று பலரை குரு ஸ்தானத்தில் வைத்திருந்தார். தியாகய்யர்வாளின் வாலாஜாப் பேட்டை சிஷ்ய பரம்பரையினரிடம் சென்று குருகுலவாஸம் இருந்தார்.

OO லயமேதையாக விளங்கினார் நாயனாப்பிள்ளை. இதற்குக் காரணமான சந்நியாசி குரு. தாள நுட்பங்களை அவருக்கு விளக்கியது முக்கியமாகத் திருப்புகழின் மூலம்தான்! திருப்புகழ் நம் நாயனாவால் மேலும் புகழ்பெற்றது. தாளமே உயிராகக் கருதப்படும் பல்லவிகளில் நாயனா இயற்றியவை தமிழழகுக்கும் பக்தி ரஸத்துக்கும் எடுத்துக்காட்டாகவும் விளங்குகின்றன.

OO பாவ சங்கீதம், விவகார சங்கீதம் என்று இரண்டாகப் பிரிக்கும் மாபெரும் எல்லைக்கோடு நாயனாப் பிள்ளையிடம் எடுபட்டுப் போனது! தமது லய ஞானத்தை உணர்த்த பக்கப் பாட்டு, வயலின், மிருதங்கம், கஞ்சிரா, கடம், மோர்ஸிங், டோலக், கொன்னக்கோல் இவற்றுடன் 'நவக்கிரகக் கச்சேரி' நடத்தினார். அந் நாளில் 'ஃபுல் பெஞ்ச் கச்சேரி' என்றும் சொல்வார்கள்! இப்படிப்பட்டவரே தம் மனமும் உருகிப் பிறர் மனத்தையும் உருக்கி உணர்ச்சி பாவத்துடன் பாடியவராக விளங்கினார்!

OO மத்தகஜம் எதனாலோ நாற்பதுகள் முடியு முன்பே நோயுற்று நலிந்தது. நோயை விடப் பாட முடியாத நிலையே அவரைத் துளைத்தெடுத்தது. திடுமென ஒரு மாலை குரல் மீண்டது. தியாகய்யர் சித்திரத்தின் முன் நின்று சித்த மடைதிறந்து இசை வெள்ளம் பெருக்கினார்! அன்றிரவே நாயனா நாதமூலத்துடன் ஒன்றினார்!

''கன்யா''

PONDS

பொன் நகைகள்
மின்னிட... சந்தன
நறுமணம் கமழ்ந்திட...

இனிய உணர்வுகள் மனதில் மலர்ந்திடும் கணங்கள். உங்கள் மேனியில் பொன் நகைகள் மின்னிட, தூய சந்தனத்தின் நறுமணம் கமழ்ந்திட இதுவரை அநுபவித்தறியா உணர்வுகளால் உள்ளம் பூரிக்கிறது; பெண்மை உங்களிடம் பூரண பொலிவு பெறுகிறது.




அரிய நறுமணம்.
மதிப்பில் பொன்னைப்
போல் உயர்ந்தது.

# பாண்ட்ஸ் சாண்டல் டால்க்

HTA 7023

# சலனம் தேடும் சமாதானம்

வீட்டுக்குள் நுழையும் போதே, பரபரவென்று கதவைத் திறந்து, ''என்னங்க இது? என்னங்க,'' என்று நடுங்கும் குரலில் சொன்ன பங்கஜத்தைக் கண்டு, சிறிதும் பதற்றப் படவில்லை ராமலிங்கம். அவள் பதற்றத்துக்குக் காரணம் எதுவாக இருக்கும் என்று அவரால் ஊகிக்க முடிந்தது. பிள்ளை பாஸ்கர் கோவை இஞ்சினியரிங் காலேஜில் படித்து வருகிறான்; கடைசி வருடம். அவ்வப் போது காற்று வாக்கில் அவனைப் பற்றிச் செய்திகள் வந்து கொண்டு இருந்தன. ''காசு வைச்சுச் சீட்டாடறான்,'' என்று ஒரு சிலரும் ''டிரிங்க்ஸ் பழக்கம் ஜாஸ்தியாயிருக்கு,'' என்று வேறு சிலரும் கொஞ்சம் மிகைப்படுத்திச் சொன்ன போது, அவர் சீரியஸாக எடுத்துக் கொள்ளவில்லை. ''என்னங்க இதெல்லாம்! பங்கஜம்தான் புலம்பித் தீர்த்தாள். ''ஹாஸ்டலும் வேணாம்; ஒண்ணும் வேணாம். இங்கிருந்தே காலேஜ் போயிட்டு வரட்டும்'' என்று அழுதாள். அவளுடன் கூடச் சேர்ந்து தூபம் போடச் சில உறவினர்களும் இருந்தார்கள்.

ஆனால் ராமலிங்கம் நிதானமாகப் பேசி அவளை அடக்கினார். ''கோளாறான வயசு; கொஞ்சம் முன் பின்னாகத்தான் இருப்பான்,'' என்று கூறி; பிள்ளைக்கும் நல்ல வார்த்தை சொல்லி விடுதிக்கு அனுப்பியதெல்லாம் ஆறு மாசத்துக்கு முந்தின செய்தி.

இப்போதும் பிள்ளையைப் பற்றி ஏதாவது புகார் வந்திருக்கும் என்று தீர்மானித்து, ''என்ன ஆச்சு? நம்ம பிள்ளையைப் பத்தின புகாரா?'' என்றார்.

ஆனால் பங்கஜம் அடுத்துச் செய்த காரியம் ராமலிங்கத்தை வியப்படைய வைத்தது. ''உள்ளே வாங்க,'' என்று படுக்கை அறைக்கு அழைத்துச் சென்றாள். ஓரமாக இருந்த புதிய 'ப்ரீஃப் கேஸை'க் காண்பித்தாள். ''திறந்து பாருங்களேன்'' என்றாள். மறுபடியும் அவள் குரல் நடுங்கியது.

''உள்ளே என்ன டைனமைட்டா?'' என்று கேலி செய்தபடியே பார்த்தார்.



முதலில் திகைப்பு, உடனேயே மகிழ்ச்சி பரவி, திகைப்பை அமுக்கி விட்டது. மொட மொடவென்று நோட்டுக் கற்றைகள்!

ஒரு டெண்டரை (லட்சக் கணக்கில்) பாஸ் செய்ய வேண்டிய பொறுப்பு ராமலிங்கத்தின் மீது விழுந்தது. குறிப்பிட்ட நபரின் டெண்டர், தகுதியில் சுமார்தான்; ஆனால் குறைந்த தொகை விண்ணப்பித்து இருந்தார்கள். ''சீக்கிரம் அப்ரூவ் பண்ணுங்க சார்'' என்று அலை அலையென்று, வந்து விட்டுப் போனார் அந்த நபர். 'என்னய்யா கேட்கிறே? சொல்லித் தொலையேன்...' என்ற எரிச்சல் அந்த ஆள் குரலில் மேலோங்கியிருந்தது.

ராமலிங்கமும் யோசித்தார். ஓய்வு பெற இன்னும் சரியாக ஒரு வருடமோ என்னவோதான் பாக்கி இருக்கிறது. பி.எஃபில் லோன் எடுத்துப் பெண்ணின் கல்யாணத்தை முடித்திருந்ததால் கணிசமாக எதுவும் கைக்கு வராது. காலேஜ் படிக்கும் பையனுக்கு இன்னும் எவ்வளவு செலவாகுமோ? வயசான காலத்தில் பெயர் தெரியாத வியாதிகள் என்னென்ன வருமோ?

வருமானத்துக்கு வகை செய்ய விரும்பினார். இந்த ஒரு வருஷத்தில் சம்பாதித்தால்தான் உண்டு. ''சரி சரி! உன் டெண்டரை அப்ரூவ் பண்ணுகிறேன்; வீட்டுக்கு வந்து பார்,'' என மெதுவாகத் தன் எண்ணத்தை வெளியிட்டார்.

பார்ட்டி நாணயஸ்தன்; சொன்னபடி வந்து 'பார்த்து' விட்டான்.

இதற்குப் போய் பங்கஜம் ஏன் குடி முழுகிப் போய் விட்ட மாதிரி பதறுகிறாள்.

''நான் பார்த்துக் கூப்பிடுவதற்குள் போயிட்டாங்க. திருப்பிக் கொடுத்துடுங்க,'' என்று கெஞ்சினாள்.

''போன தீபாவளியின் போது சிங்கப்பூர் சூட்கேஸ் ஒருத்தன் தந்தானே? அதை மட்டும் ஆசையா வாங்கி வைத்துக் கொள்ளவில்லையா,'' என வேண்டுமென்றே கடுமையை வரவழைத்துக் கொண்டு கேட்டார் ராமலிங்கம்.

''இல்லைன்னு சொல்லலை. அது வெறும் பெட்டி. அந்த கஸ்டமர் உங்களுக்கு இருபது வருஷமா தெரியும்,'' என்றாள் பங்கஜம். ''இவன் அப்படி இல்லை. பார்க்கிற பார்வையே சரியில்லைங்க.''

''பெரிய டிடக்டிவ்! கண்டுபிடிச்சுட்டே!'' என்று மனைவியை ஒரு சாடு சாடினார்.

''வேண்டாம். பெரிய வம்புல முடியப் போகுதுங்க'' என்று அவள் விடாமல் புலம்பியதைச் சகியாமல் பெட்டியை எடுத்துக் கொண்டு கிளம்புவது போல் பாவனை செய்தார்.

மனைவி சமையல்கட்டுப் பக்கம் போனதும் நோட்டுக் கற்றைகளைப் பிரித்துத் தமது

ஈஸ்வர் குமார்

தனி பீரோ லாக்கரில் வைத்துப் பூட்டி விட்டுக் காலிப் பெட்டியுடன் வெளியேறி னார்.

அன்று விடுமுறை. ஒன்றிரண்டு தினங்கள் சேர்ந்து வந்ததனால், பாஸ்கர் வந்திருந்தான்.

''என்னப்பா? ரிடையர் ஆக இன்னும் எத்தனை மாசம்?'' என்று கேட்டான்.

அவன் கேட்ட கேள்வி ராமலிங்கத்துக்கு ரசிக்கவில்லை. பேச்சை மாற்ற, ''என் னடா? பழைய பழக்கம் ஒண்ணும் இல் லையே?'' என்றார்.

''என்னங்க நீங்க? அவன் மறந்தால் கூட ஞாபகப்படுத்துவீங்க போலிருக்கே?'' என்று பிள்ளைக்குப் பரிந்து வந்தாள் பங்கஜம். ''ஏண்டா பாஸ்கர், அடுத்த வருஷம் படிப்பு முடிஞ்சுடுமே? என்ன பண்ணப் போறே?'' என்று பேச்சை மாற் றினாள்.

''பார்க்கலாம்.''

''பேசாம அப்பா மாதிரி வேலைக்குப் போய் விடு. நல்லபடியாய்ப் போகும்.

''ஏன்? தனியா பிசினஸ் ஆரம்பித்தால், நாலு காசு சம்பாதிக்கலாம்!'' என்றார் ராமலிங்கம்.

''யாருக்கு வேணும் காசு? நிம்மதிதான் முக்கியம்.''

சட்டென்று அவர் மௌனமானார். மனைவி மறுபடியும் பழைய கதையைக் கிளறி விடுவாளோ என்று தோன்றியது.

''சரி படிப்பது பாஸ்கர்; முடிவு பண்ண வேண்டியது அவன்தான்!''

''ஏண்டா அப்படித்தானே?'' என்று கேட்டாள் பங்கஜம்.

பாஸ்கர் பதில் ஏதும் சொல்லவில்லை; எங்கோ வெறித்துப் பார்த்துக் கொண்டிருந் தான்.

அன்று இரண்டாவது சனிக்கிழமை. வழக்கமாகப் பாஸ்கர் கோவை விடுதியி லிருந்து வரும் நாள்.

இருட்டி விட்டது. அவனை இன்னும் காணோம்.

''ஏன் இன்னும் வரலை பாஸ்கர்?'' என்றாள் பங்கஜம். குரலில் பதற்றம்.

ராமலிங்கம் கேலி செய்தார். ''என்ன அவன் பத்து வயசுப் பையனா இல்லை வயசுப் பெண்ணா? வருவான். ரெண்டு நாள் முன் லெட்டர் கூட வந்ததில்லே?''

''ஆமாம். நிச்சயம் வரேன்னு எழுதி யிருந்தானே?''

''வருவான். வராமல் எங்கே போய் விடுவான்,'' என்று ராமலிங்கம் சமா தானம் செய்தாரே ஒழிய அவரையும் கவலை அரிக்க ஆரம்பித்தது. ஏழரை, எட்டு, ஒன்பது என்று நேரம் ஆகிக் கொண்டே வந்தது.

'சரி. கேட்டைப் பூட்டப் போகலாம்,' என்று வாசலுக்குப் போன போது, ஓசைப் படாமல் ஒரு டாக்ஸி வந்து நின்றது.

பாஸ்கர் இறங்கவில்லை; அவனை



இரண்டு பேர் கைத்தாங்கலாகக் கொண்டு வந்தார்கள்.

''என்ன ஆச்சு பாஸ்கருக்கு?'' என்று வீலென்று அலறினார்.

குரல் கேட்டு ஓடி வந்தாள் பங்கஜம்.

''ப்ளீஸ் பீ காம். ஒன்றும் ஆகலை.. நான் அவன் புரொபஸர். இவர் டாக்டர்,'' என்று நரைமுடியுடன் காட்சியளித்த ஒருவர் தம்மை அறிமுகம் செய்து கொண் டார்.

உள்ளே வந்தார்கள். பாஸ்கரைச் சிரமப் பட்டுப் படுக்கையில் கிடத்தினார்கள். ''கொஞ்ச நாளாக ட்ரக் அடிக்ட் ஆகியிருக் கான். ஆனால் நத்திங் சீரியஸ்...''

''ஆரம்ப சமயம்தான். குணப்படுத்தி விடலாம்,'' என்றார் டாக்டர்.

''அவன் தன்னோட பழக்கத்தை நியாயப் படுத்தினதுதான் விசித்திரம்! இன்னும் ஆறு மாசம்தான் ஹாஸ்டல் வாசமாம். அதற்குள் எல்லாம் அனுபவிச்சுடணுமாம்! எப்படி இருக்கு!'' என்றார் புரொபஸர். ''அதற்குப் பிறகு வாழ்க்கை இல்லையா?''

சட்டென்று பொறிதட்டிய மாதிரி இருந் தது ராமலிங்கத்துக்கு. ஹாஸ்டல் வாழ்வுக் குப் பிறகும், வேறு பொறுப்பு இருக்கிறது பிள்ளைக்கு; ஓய்வுக்குப் பின்னாலும் தனக்கு வாழ்க்கை உள்ளது. இந்தப் பழக் கம் பாஸ்கரைப் பின்னால் பெரிதும் பாதிப் பது போல், தன் வழக்கமும் குடும்பத்தையே தாக்கும்...

''பிரிஸ்கிரிப்ஷன் தரேன். கவலைப்படா தீங்க,'' என்றார் டாக்டர்.

''எனக்குத்தான் பிரிஸ்கிரிப்ஷன் தர ணும்!'' என்று சொல்ல வேண்டும் போலி ருந்தது ராமலிங்கத்துக்கு.

முதல் முறையாக வாங்கிய கையூட்டை விடிந்ததுமே திருப்பித் தந்துவிட முடிவு செய்தார். ஒரு துணிப்பை மூட்டையுடன் அவர் மறுநாள் வெளியே கிளம்பிய போது அவர் மனைவியின் கண்கள் ஆச்சரியத்தில் விரிந்தன. ராமலிங்கமோ, தொகையைத் திரும்பிப் பெறும் நபரின் முகம் எப்படி மலரும் என்ற கற்பனையில் தோய்ந்து போயிருந்தார்.

# இரண்டாவது சூரியன்

## 19

அன்று இரவு பானுமதி சந்தோஷமாய்த் தூங்கினாள். இரண்டு குழந்தைகளுக்கு நடுவே படுத்துக் கொண்டு ஒரே போர்வைக்குள் மூன்று பேரும் ஒண்டிக் கொண்டு ஒருவரை ஒருவர் கொஞ்சி விளையாடிக் கொண்டு எப்போது பேச்சு நிறுத்தினோம், எப்போது தூங்கினோம் என்று தெரியாதபடி தூங்கிப் போனாள். நாகம்மா உலுக்கின பிறகுதான் எழுந்திருக்கவே முடிந்தது.

''அடடே எலிபாஷாணமா துன்னுடுச்சு?'' நாகம்மா வியப்பாகக் கேட்டாள். பூச்சி மருந்து என்பதை அவள் எலிபாஷாணமாய் அர்த்தம் செய்து கொண்டாள்.

''பூச்சி மருந்து நாகம்மா. கரப்பு கொல்றதுக்கு கொய்ங் கொய்ங்குன்னு அடிக்க மாட்டாங்க... அது.''

''அது குடிச்சாலும் செத்துடுவாங்களா? அடிப்பாவி...! அப்புறம்...''

மொத்த கதையும் விவரமாய்ச் சொன்னாள்.

''நம்மூரு பூச்சி மருந்து துன்றத விட எரிஞ்சு செத்துடலாம். எங்கப் பக்கம் ஒரு பொண்ணு இப்படித்தான் எலிபாஷாணம் தின்னுட்டு இப்ப அப்பன்னு கிடந்தது. பெரிய ஆஸ்பத்திரில பொழைக்க வச்சுட்டாங்க. வந்து காரம் துன்ன முடியலை. கஞ்சி குடிக்க முடியலை. உடம்பெல்லாம் புண்ணு வந்து முடி கொட்டிப் போயி... இரண்டு மூணு மாசம்தான். ஒரு நாள் வலிப்பு வந்து டாக்டர்கிட்ட தூக்கினு போச்சொல்ல போயிடுச்சு!''

செத்த அன்னிக்குப் போலீஸ் வந்தான் – 'ஏன் கோர்ட்டுக்கு வரலைன்'னு? கூட்டிக்கினு போன்னு சொன்னோம். செத்து போச்சுன்னு நாலு பேர்கிட்ட கையெழுத்து வாங்கிக்கினு போனான். நல்லா இருக்கச் சொல்ல அந்தப் பொம்பளை எப்படி இருப்பா தெரியுமா? சும்மா கிண்ணுனு இருப்பா...''

பகீரென்றது. ஆனால் சாவித்திரியை அப்படி விட மாட்டார்கள். நல்ல ஆஸ்பத்திரியில் சேர்த்திருக்கிறோம். நல்ல மாதிரியான உறவுகள்தான். கூட அதிகமாய்ப் புலம்புவார்களே தவிர, எனக்கென்ன என்று போக மாட்டார்கள்.

''இந்தக் குடிச்ச பொண்ணு அண்ணன் தானே அவரு? அன்னிக்கு இருட்டுல பார்க்கலை, சரியா. தன் வேலையை வுட்டுட்டுச் சுத்தியிருக்கு பாரேன்! அக்கா தங்கச்சி மேல பிரியம் இருக்கிறவன் அடுத்த பொம்பளைக்குக் கஷ்டம்னா ஓடிவரத் தான் செய்யறான்.''

''அவரு வீடியோ கடை ஆள் நாகம்மா. ஒரு நாள் ஞாயித்துக்கிழமையோ, லீவு நாளோ, டெக் வாங்கிட்டு வந்து படம் போட்டுப் பார்க்கணும்.''

''ஐயோ எனக்கு அப்படிப் படம் பார்க்கணும்னு ரொம்ப நாள் ஆசைம்மா. வழக்கமா பூ நர வீட்டில தினம் இப்படித்தான் பொட்டிப் படம் ஓடிக்கிட்டு இருக்கும். நின்னு பார்த்தா பொறுக்காது. அணைச்சுட்டு வந்து என்னன்னு கேட்பாங்க. ஏம்மா வாசல்ல நின்னு பார்த்தா என்ன...''

''படுத்துக்கிட்டுப் பாரு நம்ம வீட்ல.''

கிளம்பும் போது அடுப்பில் பால் காய்ந்து கொண்டிருந்தது. இறக்கி ஆறின பிறகு உரைக் குத்தி விட்டுப் போக வேண்டும்.

''நீ போம்மா. நான் செய்துக்கறேன்.''

நாகம்மா சொன்னவுடனே கிளம்பி விட்டாள்.



**நா**கம்மாவுக்கு இந்த இடம் செளகர்ய மாய்ப் பட்டிருக்க வேண்டும். இப்படித் தனித்திருத்தல் பிடித்திருக்க வேண்டும்.

ஒவ்வொரு புத்தகமாய் எடுத்துப் படம் பார்த்துக் கொண்டிருக்கிறாள் என்று பெண் குழந்தை சொல்லிற்று. சில சமயம் 'இது என்ன? இது என்ன?' என்று படங் களுக்கு விளக்கம் கேட்கிறாளாம். பானு மதியைக் கேட்பதில்லை. பயமோ என்னவோ.

எதுவாயினும் இப்படி வீட்டோடு ஒருத்தி இருப்பது பெரிய விடுதலையாய் இருக் கிறது. மறுபடி ஆண் துணை இவளுக்குத் தேவைப்பட, வெளியேறிடுவாளோ? இருக்க வேண்டும். முடியுமா? எனக்கே சில சமயம் திணறுகிறது. பழைய பயத்தில் எதற்கு எழவு என்று ஓடிப் போகிறேனே தவிர, நெருக்கம் கிடைக்கிற போது வெட்க மும், ஒருவித பரபரப்பும் ஏற்படத்தான் செய்கின்றன.

பள்ளிக்கூட வாசல் தொட்டவுடன் இரண்டு மூன்று டீச்சர்கள் சூழ்ந்து கொண்டார்கள்.

"உள்ளங்கைல சஞ்சீவி மலை யத் தூக்கிண்டு அனுமார் போன மாதிரி சாவித்திரியை அலக்கா மயிலாப்பூர் ஆஸ்பத்திரிக்கு மாத் திட்டியாமே. ஹெச்.எம். ரொம்பப் பெருமையாச் சொன்னாங்க." — தமிழ் பண்டிட் பாராட்டினாள். தமிழ் பண்டிட்டுக்கு நேரிடை யாய்ப் பேசத் தெரியாது. உவமை இல்லாமல் விஷயம் சொல்ல மாட் டாள்.

"யூ ஹாவ் டன் எ கிரேட் திங் பானுமதி. ஐ ரியலி அப்ரிஷி யேட்..." — இது ஹிஸ்டரி.

இவளுக்குப் பாராட்டி விட வேண்டும். கண்டித்து விட வேண் டும். கட்டிக் காட்ட வேண்டும் இல்லையேல் தலை வெடித்து விடும். இவையனைத்துக்கும் பேச்சுதான் உதவி செய்யும்.

எல்லா டீச்சர்களுமே நிறையப் பேசுகிறவர்கள். சில சமயம் பள்ளி பிள்ளைகளிடம் பேசுவது போல் எல்லா இடத்திலும் பேசு கிறார்கள்.

"பானுமதி டீச்சருக்குச் சாவித் திரின்னா ஒரு இது. அதனாலதான் இது செய்திருக்காங்க..."

மூன்றாவது டீச்சர் பேச ஆரம் பித்ததும் பானுமதி நகர்ந்து விட் டாள். சில சமயம் டீச்சர்கள் பள்ளி பிள்ளைகள், குழந்தை களோடு பழகிப் பழகி பதினைந்து வயது தாண்டாதவர்கள்.

'யாராவது என் பெஞ்சில் எடுத் தீங்களா? எந்த டீச்சராவது என் பென்சில் பார்த்தீங்களா?' — நான் முழுக்க பென்சில் தேடும் டீச்சர் உண்டு இங்கே.



**பாலகுமாரன்**

"**பா**னுமதி, அந்த பரத்துக்கு என் சார்பா தேங்க்ஸ் சொன்னியா? பள்ளிக் கூடத்து லெட்டர் ஹெட்ல ஒரு தேங்க்ஸ் லெட்டர் எழுதினா என்ன? அப்படியே பேரண்ட்ஸ் டீச்சர் அஸோஸியேஷன்ல மெம்பராகச் சொல்லலாம். அங்கின்தான், நம்ம ஸ்டூடன்ட்டுக்குக் கார்டியனா போட்டு அவரைக் கௌரவிக்கலாம்...." ஹெச்.எம். கேட்ட போது தலையாட்டினாள்.

'என்னங்க லெட்டரு? அபத்தங்க! இது தேவையா நான் என்ன பண்றது இதை...? சட்டம் போட்டு வச்சுக்கறதா! அப்படிப் பார்த்தா எங்க வீடு முழுக்க சட்டம் சட்டமா சர்ட்டிபிகேட் தொங்கணும்! எப்படியாவது நன்றின்னு சொல்லிடணும். சொல்லிட்டா கணக்கு தீர்ந்து போச்சு... அப்படித்தானே.'

— சிரிப்பான். கேலி செய்வான்.

"இதெல்லாம் அந்த ஆள் எதிர்பார்க்க மாட்டார் மேடம்."

"நாம செய்யணும். பானுமதி. நீ குடுத்திட றியா?"

"வேணாம் மேடம். வனிதாகிட்டயே கூப் பிட்டுக் குடுத்துடுங்க."

**க**டிதம் போயிற்று. இது தேவையே இல்லை என்று பானுமதிக்கு மறுபடி மறுபடி தோன்றிற்று.

மாலை வனிதாவை வீட்டில் டியூஷ னுக்கு இறக்கி விட்டு வாசலில் நின்றான்.

"ஹலோ!"

"ஹலோ!"

"லெட்டர் கிடைச்சதா?" — பானுமதி சாதாரணமாய்க் கேட்டாள்.

பையிலிருந்து கடிதம் எடுத்தான். இரண் டாய்க் கிழித்தான். தரையில் பறக்க விட் டான்.

"எனக்குச் சாவித்திரி டீச்சர் யாருன்னு தெரியாது. நான் ஹெல்ப் பண்ணது உங் களுக்காக. எங்க வீட்டுப் பெண் மேல அக்கறை காட்டின உங்களுக்காக. எனக்கு நீங்க செய்த உதவிக்காக. சாவித்திரி டீச்சர் செத்துப் போனா நீங்க அப்ஸெட் ஆவீங்கன்னு புரிஞ்சு செய்த உதவி. என்ன இது? பண்டமாற்றான்னு கேள்வி வரும். யெஸ்! பண்டமாற்று... பத்து ரூபாய்க்குக் கறி காய் வாங்கிட்டு ரொம்ப தேங்க்ஸுன்னு சொல் வீங்களா? இதுக்கும் சொல்ல வேணாம்."

முகத்தில் அடித்தது போலிருந்தது."

இது என் ஐடியா இல்லை."

யார் ஐடியாவா இருந்தாலும் என் ரியாக் ஷன் இதுதான். வெறும் லெட்டர்தானா? பேரண்ட் டீச்சர்ஸ் அஸோசியேஷன்ல காசு எடுத்து ஒரு மொமண்டோ தரக் கூடா தான்னு? நான் கேட்கட்டுமா. அசிங்கமா இருக்காது அது! நான் ரொம்பத் தனியான ஆள் டீச்சர். என்னால எந்த அஸோசியே

## கேள்விப்படாத கட்சிகள்!




நடந்து முடிந்த நாடாளுமன்றத் தேர்தலில் நாம் இதற்கு முன் கேள்விப்பட்டிராத கட்சிகளைக் கூடச் சந்தித்தோம்! உதாரணமாக மத்திய சென்னை நாடாளுமன்றத் தொகுதி வேட்பாளர்களில் இருவர் டெக்கான் காங்கிரஸ் கட்சியையும் மகாபாரத் மக்கள் கட்சியையும் சேர்ந்தவர்கள்! நீங்கள் எப்படியோ, எனக்கு இந்தக் கட்சிகள் வோட்டுப் போடப் போன போது தான் அறிமுகமாயின!

— ராஜ்.

---

ஷன்லயும் சேர முடியாது... சொல்லிடுங்க. தாங்க முடியாத நன்றி பொங்குச்சுன்னா, அதோ எங்க வீட்டுப் பொண்ணு இருக்கு— அது தலைலல கொட்டுங்க.'' வெளியேறினான்.

கோபமா, அலுப்பா, அலட்சியமா புரியவில்லை. ஆனால் ஏதோ ஒரு நியாயம் அவன் பக்கம் இருப்பது உணர முடிந்தது.

''ஸாரி டீச்சர்!'' அனிதா பயந்து நகம் கடித்தாள்.

''எதுக்கு ஸாரி? உட்கார். இங்கிலீஷ் எடு.'' அந்தப் பாடத்தைத் தமிழில் அவளுக்கு விளக்கிச் சொன்னாள். கடின பதங்களுக்கு அர்த்தம் சொன்னாள். அந்தப் பதங்களை வேறு வகையாய்ச் சொல்லிக் காட்டினாள். அவளை வாக்கியம் அமைக்க உற்சாகப்படுத்தினாள்.

''அந்தப் பாடத்தை இப்ப அப்படியே ஒரு தடவை எழுது.''

அதே அரை மணியாயிற்று.

''இப்ப சத்தம் போட்டுப் படி.''

அதிகம் தடங்கலில்லாமல் படிக்க முடிந்தது.

''புரியுதா?''

''சுலபமா புரியுது டீச்சர்.''

''வீட்டுக்குப் போய் மறுபடி சத்தம் போட்டுப் படி.''

''இப்ப கெமிஸ்ட்ரி எடு. இந்தா சாக்பீஸ். தரைல அந்த டயக்ரம் போடு.''

அவள் குனிந்து போட, தன் குழந்தைகள் பாடம் கவனித்தாள். சமையலறை வேலைகள் செய்தாள்.

அவள் போட்ட படத்தைத் தமிழில் விளக்கிச் சொன்னாள். தான் சொன்னதைத் திருப்பிச் சொல்ல வைத்தாள். இப்ப அந்த விளக்கம் படி. அதைப் படிச்சுக்கிட்டே நீ போட்ட படம் பாரு. ஒவ்வொரு இடமா சொல்லு. ஸ்பிரிட் லேம்ப் குடுவையிலேர்ந்து ஆரம்பி...

இது பெரிய கஷ்டமில்லை. சாப்பிட முடியாத குழந்தைக்குச் சங்கில் புகட்டுதல் தான். வகுப்பு டீச்சருக்கு இது செய்ய அவகாசம் இருக்காது. சாப்பிட்டா சாப்பிடு. சாப்பிடாட்டி போ. நூத்துக்கு நூறு கொண்டு வர முடியாது. நாப்பத்தஞ்சு நிச்சயம் முடியும். ஓட முடியாது எழுந்து நடமாட முடியும்.

''நாளைக்கு ரெண்டுத்துலயும் டெஸ்ட் வனிதா. வீட்ல போய் ஹோம் ஒர்க் முடிச்சுட்டு காலை எழுந்து இதை மறுபடி படிக்கணும்.''

''தலையாட்டிற்று.''

''அம்மா அந்தப் பொண்ணுகிட்டே பொட்டி கேக்கணும்னீங்களே!'' நாகம்மா நினைவுபடுத்தினாள்.

''கேட்கலாமா தெரியலையே...''

''அவரு ஏதோ கோவப்பட்டுக்கிட்டு போனாரே அதனாலயா?''

''என்ன டீச்சர்?''

''ஒண்ணுமில்லை நீ படி. வேணாம் நாகம்மா அப்புறம் ப்பார்த்துக்குவம்.''

''நாளைக்கு உனக்கு லீவு அதான் கேட்டேன்.''

''தெரியுது: வேணாம்.''

எட்டு மணிக்கு வாசலில் மோட்டர் சைக்கிள் சப்தம் கேட்டது. வனிதா சமையலறைக்கு வந்து விடைபெற்றாள். மறுபடி மோட்டர் சைக்கிள் பேரிரைச்சலோடு போவது தெரிந்தது.

கிழித்துப் போடும் அளவுக்குக் கோபம் வந்து விட்டது அவனுக்கு. தவறு என்று சுட்டிக் காட்டியிருக்கலாம். கடிதம் கிழித்துப்போட்டது அதிகப்பிரசங்கித்தனம். இளைஞன். படபடப்பான இளைஞன். நிதானம் குறைவான இளைஞன். சொன்னால் புரியாது.

ஒன்பதே முக்கால் மணிக்குப் படுக்கை தட்டிப் போடுகிற போது யாரோ கதவு மணி அழுத்தினார்கள்.

''யார் அது?''

''பரத்!''

''கொஞ்சம் இருங்க.''

நைட்டியைக் களைந்து விட்டு மறுபடி புடவைக்கு மாறினாள். கதவு திறந்தாள்.

''வாங்க...''

''இரண்டு நிமிஷம் டெக் மாட்டிட்டுப் போயிடறேன்.''

''டெக்கா? நான் கேட்கலையே...''

திரும்பி முறைத்தான்.

''நீங்க கேட்கலாம் டீச்சர், தப்பில்லை. என் கோபம் உங்க பள்ளிக்கூடத்து மேல தான். உங்க மேல இல்லை...''

தோல் உறையில் பொதிந்திருந்த டெக்கைக் கொண்டு வந்து டி.வி. மீது வைத்து இரண்டு தனி ஒயர்களை இடம் பார்த்துச் செருகி, மின் இணைப்புத் தேடி அதற்கு வாகாய் டி.வி.யை நகர்த்தி கேஸட் உருவி உள்ளே செலுத்தி சுவிட்ச் அழுத்த, ஒரு

சிங்கம் வட்டத்துக்குள் வந்து. இரண்டு முறை உறுமிற்று. குழந்தைகள் கை தட்டினார்கள்.

''உனக்கு கார்ட்டூன் பிடிக்குமா தம்பி.''

''பிடிக்கும் அங்கிள்.''

''இப்ப போட்டிருக்கிற படம் உனக்கு; இது அம்மாவுக்கு. இது ரெண்டும் தமிழ்ப் படம். கேஸட் வெளியே வர, ஸ்டாப் அழுத்திட்டு, எஜெக்ட் ப்ரெஸ் பண்ணணும் — இப்படி.'' செய்து காட்டினான்.

''ரிவைண்ட் பண்ண இது ப்ரஸ் பண்ணணும் — புரியுதா?'' — பொதுவாய்ச் சொன்னான்.

''நான் வரேன் டீச்சர்.''

''என்ன திடீர்னு பரத்?''

''வனிதா சொல்லிச்சு. யோசனை பண்ணிட்டு வாணாம்னுட்டீங்களாம். ஸாரி. நான் லெட்டர் கிழிச்சது தப்புத்தான். அவ்வளோ கோபம் எனக்கு. ஹெச்.எம். முன்னாடி வந்து கிழிச்சுப் போடணும்னு நினைச்சேன். ட்ராமாவாயிடும். வனிதா கஷ்டப்படும். அதான் உங்க மேல காட்டிட்டேன்.''

''இல்லை பரத்! அது என்ன செய்யறதுன்னு தெரியாத செய்த மரியாதை.''

''இது வேண்டாம்ன்னு உங்களுக்குச் சொல்லத் தெரியலையா?''

''சில இடங்கள்ல சிலது சொல்ல முடியாது பரத். சொன்னாலும் எடுபடாது.''

அமைதியாய்த் தலை குனிந்து நின்றான்.

அவன் கிழித்துப் போட்டக் காகிதங்கள் அங்கேயே கிடந்தன. குனிந்து பொறுக்கி, பையில் வைத்துக் கொண்டான்.

''நான் பண்ணது தப்புத்தான். எனக்கு இந்த லெட்டர் இன்ஸல்ட் மாதிரி பட்டது. எரிச்சல் வந்தது; எனக்கு எரிச்சல் முக்கியமாயிடுச்சே தவிர உங்களை அது காயப்படுத்துமேன்னு நினைக்கலை. ஸ்லிப் பண்ணிட்டேன். ஸாரி!'' சிரித்தான்.

பானுமதிக்கும் அவன் பின்னடைந்த விதம் சிரிப்பு தந்தது.

''டெக்குக்கு எவ்வளவு தரணும்?''

''ஒரு நாளைக்கு ஆயிரம் ரூபா.''

''ஐயோ!''

''ப்ளீஸ் மறுபடி எரிச்சல் மூட்டிடாதீங்க. 'டெக் கேட்க வேணாம் பரத்கிட்டன்னு' சொல்ற அளவுக்கு வருத்தப்பட்டதுக்குக் காரணம் நான். தயவுசெய்து அதுக்குத் தண்டனை தராதீங்க.''

''இது பண்டமாற்றுத்தானே?''

''எது?''

''டெக் கொண்டாந்து போட்டது.''

''ஆமா!''

''அதுக்கு ஒரு காசு உண்டு இல்லையா?''

''உண்டு!''

''அதை நான் தர வேண்டாமா?''

''காசா கொடுத்து முடிச்சுடணும்னா முடிச்சுடுங்க. இல்லை...''

''ம்ம் சொல்லுங்க''

''வனிதா வீட்டுக்குப் போய் உட்கார்ந்ததும் பாடம் படிக்குது டீச்சர். என்னம்மான்னு கேட்டேன். 'ரொம்ப நல்லா புரியுது மாமா பானுமதி டீச்சர் சொல்லிக் கொடுத்தா'ன்னு பதில் சொல்லிச்சு. அது பள்ளிக்கூடம் போனதிலேர்ந்து இதுதான் முதல் நாள் முதல் தடவை அது பாடம் புரியுதுன்னு சொன்னது. இனிமே அதுக்கு எல்லாமே புரியும்னு தோணுது. அந்தக் குழந்தையைக் கீழே போட்டுறாதீங்க. அது போதும் எனக்கு'' — கண் கலங்குகிறானா? தெரியவில்லை...

''பரத் என்ன இப்படி?''

''ஐ யம் ஹாப்பி. வெரி ஹாப்பி. ரொம்ப நாளைக்குப் பிறகு, சந்தோஷமா இருக்கேன். அதை மக்கு மக்குன்னு திட்டின டீச்சர் தெரியும். இருநூறு ரூபா ட்யூஷன் பீஸ் வாங்கிட்டுத் தினம் தினம் ஐம்பது தடவை தலைல குட்டின வாத்தியார் தெரியும். இந்த அக்கறை நான் எங்கேயும் பார்க்கலை... என் நன்றியை நான் லெட்டர்ல எழுத முடியாது. வாசல்ல நின்னு சொல்ல முடியாது. இந்த டெக் பண்டமாற்று — அதுக்கு அர்த்தம் — தேங்க்யூ. குட் நைட்!''

வெளியேறினான்.

உள்ளே, பானுமதி நெஞ்சில் யாரோ புகுந்து கொண்டார்கள். பானுமதி கார்ட்டூன் பார்த்தாள். மனசுக்குள் அவன் பேச்சே கேட்டுக் கொண்டிருந்தது.

(தொடரும்)

# கூட்டணி பிடிக்காத பின்னணித் தலைவர்!

ராஜீவ் காந்தி — ராஜ்மோகன் காந்தி போட்டி காரணமாக, அங்கே வேட்பாளராக நிற்கும் மூன்றாவது நபர் பின்னணிக்குப் போய் விட்டார். கூட்டணி என்றாலே அலர்ஜி என்று ஒதுங்கும் இவர், ஒவ்வொரு தேர்தலிலும் ஒரு முக்கியமான தொகுதியில் போட்டியிடுவதை வழக்கமாகக் கொண்டிருக்கிறார். கன்ஷி ராம், தமது கட்சியை 'பகுஜன் சமாஜக் கட்சி' என்று அழைக்கிறார். 1988 — இல் வி.பி. சிங்கும் சுனில் சாஸ்திரியும் போட்டியிட்ட அலகாபாத் தேர்தலிலும் இவர் தம் கைவரிசையைக் காட்டினார். அரசியலில் நுழைந்து ஐந்து வருடங்கள் ஆகின்றன. இதுவரை ஒரு தேர்தலிலும் ஜெயிக்காவிட்டால் என்ன? இந்தத் தேர்தலில் அமேதியில் மட்டுமின்றி எச்.கே.எல். பகத்தை எதிர்த்து டில்லி கிழக்குத் தொகுதியிலும் போட்டியிட்டார்!

— வீக்லி

— ராஜ்

# சுகப்பிரசவத்துக்குச் சில யோசனைகள்

**சுகப் பிரசவத்துக்குச் சில யோசனைகளைக் கூறுமாறு கேட்டபோது சென்னை, ஈ. வி. கல்யாணி நர்ஸிங் ஹோமைச் சேர்ந்த டாக்டர் கீதா அர்ஜுன் எடுத்த எடுப்பில் அழுத்தம் கொடுத்துச் சொன்னது: கர்ப்பிணி ஒரு நோயாளி அல்ல!**

'கர்ப்பம்' என்பது ஒரு நோயோ வியாதியோ அல்ல – அதனால் கர்ப்பமுற்ற பெண்கள் எல்லா விதங்களிலும் சகஜமான வாழ்க்கை நடத்தலாம், நடத்த வேண்டும்! நம் குடும்பங்களில் பெரியவர்கள் இதைப் பெரும்பாலும் அனுமதிக்க மாட்டார்கள். 'குனியாதே, நிமிராதே, மாடிப்படி ஏறாதே, பஸ்ஸில் போகாதே' என்று கர்ப்பிணிப் பெண்ணைக் கட்டுப்படுத்துவதோடு அச்சுறுத்தவும் செய்வார்கள். இதெல்லாம் அநாவசிய பயத்தால் விளைவதுதான். உண்மையில் கர்ப்பிணிப் பெண்கள் தாங்கள் வழக்கமாக ஈடுபடும் எந்தச் செயலிலும் தயக்கமின்றி ஈடுபடலாம். டென்னிஸ் ஆடும் பழக்கம் இருப்பவர்கள் தொடர்ந்து டென்னிஸ் ஆடலாம்; நாட்டியம் ஆடுபவர்கள் நாட்டியம் ஆடலாம்; கூலி வேலை செய்பவர்கள் தொடர்ந்து செய்யலாம்... வழக்கமில்லாத புதிய உடற் பயிற்சியில் ஈடுபடுவதையும் திடீரென்று கடின உடல் உழைப்பை மேற்கொள்வதையும்தான் தவிர்க்க வேண்டும்.

எல்லாவற்றையும் விட மிக முக்கியம் – கர்ப்பம் தரித்த 45 – 55 நாட்களுக்குள் டாக்டரிடம் சென்று கட்டாயம் முதல் பரிசோதனையைச் செய்து கொள்ள வேண்டும். இந்தக் காலத்தில் கூட அறியாமை காரணமாகச் சிலர் எட்டாம் மாதம் வரை டாக்டரிடம் போவதில்லை. கர்ப்பம் முற்றிய நிலையில் சர்க்கரை வியாதி போன்று ஏதேனும் பிரச்னை இருந்தால் டாக்டரால் உதவ முடியாமல் போகக்கூடும். ஆனால் ஆரம்பக் கட்டத்திலேயே டாக்டரிடம் சென்றால் இரத்தப் பரிசோதனை செய்து, சோகையைத் தவிர்க்க வழிகள் சொல்வதோடு, கணவன் – மனைவியிடையே ஒவ்வாத Rh பிரிவுச் சேர்க்கை இருப்பின், அதனால் ஏற்படக்கூடிய விளைவுகளைச் சந்திக்கவும் டாக்டர்கள் தயாராவார்கள்; சர்க்கரை வியாதி உள்ள தாய்மார்களுக்கு உணவுக் கட்டுப்பாடுகளை விதித்துப் பிரசவம் சிக்கலாகிக் குழந்தை இறந்து போகும் ஆபத்தையும், குறையுள்ள குழந்தை பிறக்கும் ஆபத்தையும் தவிர்ப்பார்கள். மேலும், அசாதாரண பலவீனமுள்ள பெண்களுக்குத் தேவைப்பட்டால் ஓய்வை வலியுறுத்துவார்கள். தேவையான அளவுக்கு இரும்புச் சத்து மற்றும் பி.காம்ப்ளெக்ஸ் அடங்கிய டானிக்குகளை எழுதிக் கொடுப்பார்கள்.

## பப்பாளிக்குத் தடையில்லை!

கர்ப்பிணிப் பெண்கள் புரதச் சத்து அதிகமுள்ள உணவுகளை உட்கொள்ள வேண்டும் – டப்பாவிலும் பாட்டிலிலும் அடைத்து விற்கப்படும் செயற்கைப் புரதமல்ல – கண்டல், பருப்பு, கடலை போன்ற இயற்கை உணவு வகைகளில் கிட்டும் புரதம். தினமும் இரு முறை பால் அருந்துவதோடு, சீஸ் போன்ற சத்துணவு, முட்டை, வேறு அசைவ வகைகளையும் உட்கொள்ளலாம். பச்சைக் காய்கறிகள், பழங்கள் கட்டாயம் உண்ண வேண்டும். பப்பாளிப் பழத்தைத் தைரியமாகச் சாப்பிடலாம். அதனால் உடலுக்கு வைட்டமின், தாது உப்புக்கள் கிடைக்குமேயன்றி அபார்ஷன் ஆகாது.

## பெருக்கி மொழுகினால் பிரசவம் ஆகுமா?

கர்ப்பமுற்ற முதல் மூன்று மாதங்களுக்குப் பயணங்கள் மேற்கொள்வது சற்று சிரமமாக இருக்கக்கூடும். ஆனால் பயணம் மேற்கொள்வதற்குத் தடையேதும் கிடையாது. நான்காம் மாதம் முதல் ஏழாம் மாத

---

- "குழந்தை பிறந்தவுடன் அதனைக் கவிழ்த்துப் பிடித்து, பின்புறத்தில் தட்டி அழ வைக்கும் வழக்கமெல்லாம் இப்போது கிடையாது. பிறந்ததும் குழந்தையைத் தாயின் நெஞ்சில் கிடத்துவோம். இது குழந்தைக்குப் பாதுகாப்பு உணர்வையும், தாய் சேய் இடையே வலுவான பந்தத்தையும் அளிக்கும்" என்று கூறுகிறார் டாக்டர் கீதா அர்ஜுன்.

எதிர்ப்பக்க வண்ணப் படத்தில் உள்ள குழந்தை பிறந்தபோது அதன் தந்தையும் உடன் இருந்து, தமது மனைவிக்குப் பிரசவ சமயத்தில் ஆதரவு அளித்ததோடு, குழந்தை பிறந்த கணத்தின் ஒப்பற்ற மகிழ்ச்சி எல்லையையும் மனைவியுடன் பகிர்ந்து கொண்டார்.

இறுதி வரையில் தைரியமாகப் பிரயாணம் செய்யலாம். கடைசி ஆறு வாரங்களுக்கு மட்டும் நெடுந்தூரப் பயணத்தை மேற் கொள்ளக் கூடாது.

டாக்டரிடம் முதல் செக்அப் செய்து கொண்டு உடல்நிலை சாதாரணமாக இருப்பதை உறுதி செய்து விட்டால், பஸ், ஆட்டோ, ஸ்கூட்டர் என்று எல்லாவித வாகனங்களிலும் பிரயாணம் செய்யலாம்.

உடலுறவு கொள்வது குறித்துக் கர்ப்ப முற்ற பெண்களுக்குப் பலவித பயங்கள், சந்தேகங்கள் உள்ளன. பயப்படத் தேவையே இல்லை. இதில் ஒரு விதி முறையை மட்டும் உறுதியாகக் கடைப் பிடித்தால் போதும். அதாவது கர்ப்பிணிப் பெண்ணுக்கு அசௌகரியமாக இருக்கு மானால் உடலுறவைத் தவிர்த்து விட வேண்டும். மற்றபடி உடலுறவு கொள்வதில் தவறில்லை.

ஒன்பதாம் மாதத்தில், சீக்கிரம் சுகப் பிரசவம் ஆக வேண்டும் என்பதற்காகப் பெரியவர்கள் கர்ப்பிணிப் பெண்ணை வீட்டைப் பெருக்கி மொழுகச் செய்வார் கள். இதனால் விசேஷமான பயன் எதுவும் இராது.

### மனத்தளவில் தயார் ஆகுதல்

மொத்தத்தில், கர்ப்பிணிப் பெண்கள் தங்களால் இயன்ற அளவு உடல் உழைப் பில் ஈடுபட்டுக் கொண்டு, சத்தான உணவு களைச் சாப்பிட்டுக் கொண்டு, முடங்கிக் கிடக்காமல் சுறுசுறுப்பான வாழ்க்கை முறையை மேற்கொண்டால் போதும். தவறாமல் டாக்டரிடம் அவர் குறிப்பிடுகிற தேதிகளில் செக்அப்புக்குப் போக வேண் டும். இவ்வாறு செய்து வந்தால் மனம் கவலையின்றி இலேசாகவும் ஆரோக்கிய மான சிந்தனையுடனும் இருக்கும். பிரசவ காலத்தில் தேவையற்ற பயமும் டென்ஷனும் ஏற்படாது. டாக்டருடன் முழுமையாக ஒத்துழைப்பதற்கான வாய்ப்புகள் அதிகமா கும்.

— இது பொதுவான நிலை என்றா லும், மிகவும் தைரியசாலியான பெண்கள் பிரசவத்தின் போது மனம் தளர்ந்து போவ தும் பயந்தாங்கொள்ளிகள் அந்த நேரத்தில் வைராக்கியத்துடன் இருப்பதும் கூட உண்டு!

பிரசவத்தின் படிப்படியான நிலை களைப் பற்றி டாக்டரிடம் கேட்டுத் தெரிந்து கொள்வது அதனைச் சந்திக்க மிகவும் உதவிகரமாய் இருக்கும். டாக்டருக்கு அதை விளக்க நேரம் இல்லையெனில் **Pre-natal classes** எனப்படும் கர்ப்பிணிப் பெண்களுக் கான வகுப்புகளுக்குப் போய்க் கற்றுக் கொள்ளலாம். இவை மேற்கத்திய நாடு களில் நிறைய உண்டு. நம் நாட்டில் இந்த வசதி குறைவு. எங்கள் மருத்துவமனை இவ் வகுப்புகளை நடத்துகிறது. இத்தகைய வகுப்புகளுக்குச் செல்ல முடியாதவர்கள் அறிவியல் அடிப்படையிலான நூல்களைப் படிப்பதன் மூலம் மனத்தளவில் பிரசவத் துக்குத் தங்களைத் தயார்ப்படுத்திக் கொள்ளலாம்.

### கணவன் கூட இருக்க வேண்டும்!

பிரசவத்தின் போது கணவன் மனைவி யுடன் இருந்து ஆதரவு தருவது நம் நாட்டி லும் பெருகி வருகிறது. பல ஆண்கள் மனைவியுடன் சேர்ந்து கர்ப்பம், பிரசவம் பற்றிய நூல்களைப் படித்து விட்டு வரு கிறார்கள். பிரசவ வேதனையைக் கண் கூடாகக் காண்பதோடு குழந்தை பிறக்கும் கணத்தின் ஒப்பற்ற மகிழ்ச்சி எல்லையை யும் அவர்கள் மனைவியுடன் சேர்ந்து அனு பவிக்கிறார்கள். இதனால் குடும்ப பந்தம் வலுப்படுகிறது.

### மூட நம்பிக்கைகள்:

பயங்கரமான சினிமா பார்த்தாலும் திடீர் அதிர்ச்சி ஏற்பட்டாலும், கிரகணத் தின் போது வெளியே போனாலும், தாயின் மனநிலையில் அதீத கலக்கம் ஏற்பட்டாலும் குழந்தை குறையுடன் பிறக்கும் என்று சொல்லப்படுவது சரியல்ல. ஒரு குழந்தை யின் உடற்கூறு அமைப்பு, பெண் முட்டை யுடன் ஆண் கரு இணையும் ஒரு வினாடித் துளியின் ஒரு பகுதியில்தான் நிர்ணயிக்கப் படுகிறது. இந்த வினாடித் துளியும் கரு இணைப்பும் மனிதக் கட்டுப்பாட்டில் இல்லை. எனவே chromosomal கோளாறு களுக்குத் தாயின் மேல் அல்லது கிரகணத் தின் மேல் பழி சுமத்துவதில் அர்த்த மில்லை.

### கடினமான பிரசவங்கள்:

உலகில் எண்பது முதல் எண்பத்தைந்து சதவிகிதம் பெண்களுக்குச் சுகப் பிரசவமே நிகழ்கிறது. மற்ற பதினைந்து முதல் இருபது

---

**○ சிந்தித்துப் பார்க்காமல் பேசுவது என்பது குறி பார்க்காமல் சுடுவதைப் போன்றதாகும்!**

**— ஹாஸ்லிட்**

**தகவல்: புத்தனாம்பட்டி சி. மணி.**





* கருவிலுள்ள சிசுவின் இதயத் துடிப்பைக் கவனமாகக் கேட்கிறார் இந்த நர்ஸ்.

சதவிகிதத்தினருக்கு. மேற்சொன்ன அவ்வளவு யோசனைகளையும் கடைப்பிடித்தால்கூட, சுகப் பிரசவம் நிகழாமல் போக வாய்ப்பு இருக்கிறது. இதற்குக் காரணம் இயற்கையாய் அமைந்த கோளாறுகளேயன்றிக் கர்ப்பிணிப் பெண்ணின் அலட்சியமோ, அசிரத்தையோ அல்ல. ஒரு கர்ப்பிணிப் பெண் பட்டினி கிடந்து தன்னையே வருத்திக் கொண்டாலொழியக் கர்ப்பம் பாதிக்கப்படும் வாய்ப்பு கிடையாது.

**இயற்கைக் கோளாறுகளுள் சகஜமானவை:**

குழந்தை அளவில் பெரிதாக இருக்க, பெண்ணின் உடல் அமைப்பு குறுகியதாக இருப்பின் இந் நிலையில் இயற்கைப் பிரசவம் சாத்தியமே இல்லை. சிசேரியன் செய்தே ஆக வேண்டும். குழந்தையின் இறுதிக் கட்ட வளர்ச்சியைக் கொண்டு இந் நிலையை ஓரளவு முன்கூட்டியே கணிக்க முடியும்.

குழந்தையின் கால்கள் கீழ் நோக்கியிருப்பது (**Breech**); கொடி சுற்றியிருப்பது போன்ற நிலைகளில் சிசேரியன் செய்யாமல் இயற்கைப் பிரசவத்துக்கு முயல்வது ஆபத்தில் முடியும். இந் நிலைகள் ஏற்படக் கூடும் என்பதை முன்கூட்டியே அறுதியிட்டுச் சொல்ல முடியாது.

மேற்கூறிய காரணங்களால் சுகப் பிரசவம் நிகழாமல் போனால் வருந்தித் தவிக்க வேண்டியதில்லை; அடுத்த பிரசவத்தைப் பற்றி அதீத கவலைப்பட வேண்டியதுமில்லை. இயற்கைக் கோளாறுகளுக்கு மாற்றாக இன்று மருத்துவ வசதிகள் பெருகியுள்ளதை எண்ணி மகிழ்வதுதான் புத்திசாலித்தனம்.

**அபார்ஷன் எப்போது அவசியம்?**

ஜெர்மன் மீசல்ஸ் நோய் தாக்கினால் மட்டுமே கரு பாதிப்பு உறுதி; அபார்ஷன் அவசியம். கர்ப்பமுற்ற காலத்தில் டைபாய்டு, ஜாண்டிஸ் போன்ற நோய்கள் வராமல் பாதுகாப்பாக இருப்பது நல்லது. மீறி வந்து விட்டால் மிகக் கவனமாகக் கருவைப் பாதிக்காத மருந்துகளை உட்கொண்டு வைத்தியம் செய்து கொள்ள வேண்டும். எனவே, பெண்கள் எப்போது டாக்டரிடம் போனாலும் எச்சரிக்கையாக, மாதவிடாய்த் தேதி பற்றிய நினைவுடன் போக வேண்டும். கூச்சமில்லாமல் அதை டாக்டரிடம் சொல்ல வேண்டும். இவ்வாறு சொல்வதால், டாக்டர்கள் கருவைப் பாதிக்கக்கூடிய சில ஆன்டிபயாடிக்குகளைக் கொடுப்பதைத் தவிர்க்க முடியும். பொதுவாகவே பெண்களைப் பொருத்தமட்டில் டாக்டர்கள் எப்போதும் முன் எச்சரிக்கையுடன் பழக்கத்தில் உள்ள, ஆபத்தற்ற ஆன்டிபயாடிக்குகளைத் தருவது நலம்.

தொகுப்பு: **சீதா ரவி**

வண்ணப்படம்:
**டாக்டர் அர்ஜுன் ராஜகோபால்**

# தலைவலியோ, ஃப்ளூவோ இனி நான் தளர்ந்து விட மாட்டேன்.கைவசம் இருக்கிறது ஸ்பிக்டால்.



## ஸ்பிக்டால்

விடை கொடுங்கள் தலைவலிக்கு ஸ்பிக்டால் மூலம்.
பாரஸிட்டமால் கொண்ட ஸ்பிக்டால்,
ஃப்ளூவையும் நீக்குகிறது. தீங்கற்றது.




**SPIC**

**ஸதர்ன் பெட்ரோகெமிகல்**
**இண்டஸ்ட்ரீஸ் கார்ப்பொரேஷன் லிமிடெட்**
ஃபார்மசூடிகல் டிவிஷன்,
92, G.N. செட்டி ரோடு, சென்னை-17.

PROFAD/SPIC/318/89/TAM

# பொன்னியின் செல்வன்

## அத்தியாயம் 42

## மலையமான் துயரம்

சம்புவரையர் முன்கட்டுக்கு வந்ததும் கந்தமாறனைத் தனியாக அழைத்து, "மகனே! நம் குலத்துக்கு என்றும் நேராத ஆபத்து இன்று நேர்ந்திருக்கிறது! அதிலிருந்து நாம் தப்ப வேண்டுமானால் நான் சொல்வதை உடனே நீ தடை சொல்லாமல் நிறைவேற்ற வேண்டும்" என்று கூறினார்.

கரிகாலருடைய மரணம் கந்தமாறனைப் பெரிதும் கலங்கச் செய்திருந்தது. தான் வந்தியத்தேவனைக் கொல்ல நினைத்தது எவ்வளவு பெரிய தவறு என்பதையும் அவன் உணர்ந்திருந்தான். "தந்தையே! மூடனாகிய என்னாலேதான் நம் குலத்துக்கு இந்த ஆபத்து நேர்ந்திருக்கிறது. அதற்காக என்னை மன்னியுங்கள். தாங்கள் என்ன கட்டளையிட்டாலும் அதை நிறைவேற்றி வைக்கிறேன்" என்றான்.

"நீ உடனே ஒருவருக்கும் தெரியாமல் இந்த மாளிகையை விட்டு வெளியேற வேண்டும். நான் படுக்கும் அறையில், கட்டிலுக்கு அடியிலிருந்து சுரங்கப் பாதை ஒன்று போகிறது உனக்குத் தெரியும் அல்லவா? அது வேட்டை மண்டபத்திலிருந்து போகும் சுரங்கப் பாதையில் இம் மாளிகையின் மதில் சுவரண்டை போய்ச் சேருகிறது..."

"தந்தையே! இந்த இக்கட்டான நிலைமையில் தங்களைத் தனியே விட்டு விட்டு என்னைச் சுரங்க வழியில் தப்பித்துப் போகச் சொல்கிறீர்களா?" என்றான் கந்தமாறன்.

"பிள்ளாய்! அதற்குள் உன் வாக்குறுதியை மறந்து பேசுகிறாயே? ஆம்; நீ போகத்தான் வேண்டும். கொல்லிமலைத் தலைவன் வல்வில் ஓரியன் வம்சத்துக்கு இப்போது நீ ஒருவன்தான் இருக்கிறாய். அவசியமாயிருந்தால், நீ அந்த மலைக்கே போய் மறைந்து வாழ வேண்டும். மதுராந்தகத் தேவருக்குப் பட்டங்கட்டுவது என்று நிச்சயமாகி, நான் உனக்குச் செய்தி அனுப்பிய பிறகுதான் திரும்பி வர வேண்டும்!" என்றார் சம்புவரையர்.

"மன்னிக்க வேண்டும், தந்தையே! மறைந்து வாழ்வது என்னால் இயலாத காரியம். வல்வில் ஓரியின் குலத்துக்கு அத்தகைய கோழையைப் பெற்ற அபகீர்த்தி வேறு வர வேண்டுமா? இந்தக் கணமே என்னுடைய இன்னுயிரைக் கொடுக்கச் சொன்னீர்களானால் கொடுக்கிறேன். ஆனால் ஒளிந்து வாழ ஒருப்படேன்!" என்றான் கந்தமாறன்.

சம்புவரையர் சிறிது யோசனை செய்து விட்டு, "மகனே! உன்னைச் சோதனை செய்வதற்காகக் கூறினேன். ஓடித் தப்பித்துக் கொள்ளவும் மறைந்து வாழவும் நீ இஷ்டப்படவில்லை. நல்லது; உயிருக்கு ஆபத்து நேரக்கூடிய வீரச் செயலிலேதான் உன்னை நான் ஏவப் போகிறேன். சுரங்கப்பாதை வழியாக உடனே வெளியேறிச் செல்! ஆனால் கொல்லிமலைக்குப் போக வேண்டாம்! நேரே தஞ்சாவூருக்குப் போ! பெரிய பழுவேட்டரையர் அநேகமாக அங்கே இருக்கலாம். இருந்தால், அவரிடம் இங்கே

அமரர் கல்கி

நடந்ததைச் சொல்லு! அவர் இல்லாவிட்டால் சின்னப் பழுவேட்டரையரிடமும் மதுராந்தகத் தேவரிடமும் சொல்லு!....''

''ஐயா! இங்கே என்ன நடந்தது என்று அவர்களிடம் சொல்லட்டும்?''

''இது என்ன கேள்வி? கரிகாலரின் மரணத்தைப் பற்றிச் சொல்லு! 'நாம் உத்தேசித்திருந்த காரியம் விதி வசத்தினால் வேறு விதமாக நடந்து விட்டது! கரிகாலர் மாண்டு விட்டார்! 'மதுராந்தகருக்குப் பட்டம் கட்ட இதுதான் தக்க சமயம்' என்று அவர்களுக்குத் தெரியப்படுத்து! மலையமானும் கொடும்பாளூர் வேளாளும் அதற்குக் குறுக்கே நிற்பார்கள். நமது பலத்தையெல்லாம் உடனே திரட்டி அந்த இரண்டு பேரையும் அடியோடு அழித்து விட வேண்டும் என்று கூறு!'' என்றார் சம்புவரையர்.

''கரிகாலர் எப்படி மரணமடைந்தார் என்று அவர்கள் கேட்டால் என்ன சொல்லட்டும்?'' என்றான் கந்தமாறன்.

''வேறு என்ன சொல்கிறது? வாணர் குலத்தைச் சேர்ந்த வந்தியத்தேவன் அவரைக் கொலை செய்து விட்டான் என்று கூறு! இன்னும் ஒரு முக்கியமான விஷயம். இதை நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்! வந்தியத்தேவன் ஈழ நாட்டுக்குப் போய்த் திரும்பி வந்திருக்கிறான். அங்கே அருள்மொழித் தேவனையும் பிறகு பழையாறையில் இளையபிராட்டியையும் பார்த்து விட்டு வந்திருக்கிறான். அருள்மொழித்தேவன் நாகைப்பட்டினத்தில் மறைந்திருந்து இப்போது வெளிப்பட்டிருப்பதாக ஒரு செய்தி வந்திருக்கிறது. அருள்மொழித்தேவன் சிங்காதனம் ஏறும் ஆசையினால் அண்ணனைக் கொல்லுவதற்கு வந்தியத்தேவனை அனுப்பி வைத்தான் என்ற வதந்தியைச் சோழ நாட்டில் பரப்ப வேண்டும். பழையாறை இளையபிராட்டியும் இதற்கு உடந்தையென்ற சந்தேகத்தையும் உண்டு பண்ண வேண்டும். இதையெல்லாம் பழுவேட்டரையர்களிடமும் மதுராந்தகத் தேவரிடமும் சொல்லு!....''

''தந்தையே! தாங்கள் சொல்வதே உண்மையாகவும் இருக்கலாம் அல்லவா? சிநேகத் துரோகியான வந்தியத்தேவன் அத்தகைய பயங்கரமான எண்ணத்துடனேயே இந்த மாளிகைக்கு வந்திருக்கலாம் அல்லவா?''

''இருக்கலாம், மகனே! ஆனால் பழுவூர் இளையராணி திடீரென்று மாயமாய் மறைந்து போனதற்குக் காரணம் கண்டு பிடிக்க வேண்டுமே? அவள் பேரிலும் அவளுக்கு உடந்தையாயிருந்த பாண்டிய நாட்டு ஆபத்துதவிகளின் பேரிலும் வல்லவரையன் வந்தியத்தேவன் குற்றம் சாட்டுகிறானே!....''

''குற்றம் செய்வதன் மற்றவர்கள் பேரில் அதைச் சுமத்தவே பார்ப்பான். இப்போது எனக்கு எல்லாம் விளங்குகிறது, தந்தையே! பழுவூர் இளையராணியைப் பழையாறைக் குந்தவை தேவிக்கு எப்போதும் பிடிப்பதேயில்லை. கரிகாலரைக் கொன்று விட்டு அதே சமயத்தில் பழுவூர் இளைய ராணியை அபகரித்துக் கொண்டு போவதற்கும் அவள் தான் ஏற்பாடு செய்திருக்க வேண்டும். முதன் மந்திரி அநிருத்தரும் இதற்கு உடந்தை போலிருக்கிறது. அதற்காகவே இந்த வந்தியத்தேவனை அவர்கள் அனுப்பியிருக்கிறார்கள்! ஐயோ! அவர்களுடைய சூழ்ச்சியை அறியாமல் மோசம் போய் விட்டோமே?''

''கந்தமாறா! போனதைப் பற்றி வருந்துவதில் பயனில்லை. இனிமேல் நடக்க வேண்டியதைப் பார்க்க வேண்டும். நீ உடனே புறப்பட்டுச் செல்! கரிகாலரின் மரணச் செய்தி சுந்தர சோழருக்குப் போய்ச் சேர்வதற்கு முன்னால், தஞ்சையில் வேறு யாருக்கும் தெரிவதற்கு முன்னால், பழுவேட்டரையர்களுக்கும் மதுராந்தகருக்கும் தெரிய வேண்டும். ஆகையால் நீ விரைந்து செல்! தஞ்சைக் கோட்டைக்குள் போவதற்கும் இரகசியச் சுரங்க வழி உண்டு என்பது உனக்குத் தெரியும் அல்லவா?....''

''தெரியும், தெரியும்.''

''அப்படியானால் உடனே புறப்படு!''

''புறப்படுகிறேன், தந்தையே! என் தங்கை — மணிமேகலை — அவளைப் பற்றித் தான் சிறிது கவலையாயிருக்கிறது.''

''வேண்டாம் உனக்கு அந்தக் கவலை! நம்மிடம் அவள் உளறியது போல் வேறு யாரிடமும் உளறுவதற்கு நான் விட மாட்டேன். அப்படி அவள் உளற முற்பட்டால், அவளை என் கையினாலேயே கொன்று விடுவேன்....''

''ஐயோ! அதற்காகத்தான் கவலைப்படுகிறேன். தங்கள் கோபத்தை எண்ணித்தான் பயப்படுகிறேன்....''

''வேண்டாம்! அவளுடைய மனத்தை மாற்றும் வழி எனக்குத் தெரியும். ஆகா! விதி விசித்திரமானதுதான்! முதலில் அவளை நாம் மதுராந்தகத் தேவருக்கு மணம் செய்து கொடுப்பது என்று எண்ணினோம். இடையில் அந்த எண்ணத்தை மாற்றிக் கொண்டு கரிகாலருக்கு மணம் செய்து கொடுக்க உத்தேசித்தோம். கரிகாலர் இன்று பிணமாகக் கிடக்கிறார். நல்ல வேளை, மணிமேகலையின் உள்ளம் அவரிடம் செல்லவில்லை. நமது பழைய உத்தேசத்தையே நிறைவேற்ற வேண்டியதுதான்....''

''ஆனால், தந்தையே! மணிமேகலையின் உள்ளம் இப்போது அந்தச் சண்டாளன்

வந்தியத்தேவன் பேரில் அல்லவா போயிருப்பதாகத் தெரிகிறது?''

''அதெல்லாம் ஒன்றுமில்லை, மகனே! மணிமேகலைக்குத் தன் மனத்தைத் தான் அறியும் பிராயமே இன்னும் வரவில்லை. அவளை நான் கவனித்துக் கொள்கிறேன். நீ இனி ஒரு கணமும் இங்கே தாமதிக்க வேண்டாம்!''



ச்சமயம் மதிள் சுவர்களுக்கு வெளியில் வெகு சமீபத்தில் எழுந்த ஆரவாரத்தைக் கேட்ட கந்தமாறன் "அப்பா! இது என்ன? மலையமான் படைகள் நெருங்கி வருவது போல் காண்கிறதே? மலையமானைத் தாங்கள் மாலையில் பார்த்த போது அந்தக் கிழவன் என்ன சொன்னான்?'' என்று கேட்டான்.

''நல்ல மங்களகரமான செய்தியைத்தான் சொன்னான். மணிமேகலையை ஆதித்த கரிகாலருக்கு மணம் செய்து கொடுக்கப் போகும் செய்தி அறிந்து அக் கிழவன் மிக்க மகிழ்ச்சி அடைந்தானாம். அதே மணப் பந்தலில் அவனுடைய மகள் வயிற்றுப் பேத்தி ஒருத்தியையும் மணஞ் செய்து கொடுக்கலாம் என்று அழைத்து வந்திருக்கிறானாம்! அழகாயிருக்கிறதல்லவா? மாளிகைக்கு வரும்படி நான் அழைத்ததற்கு, நாளைப் பொழுது விடிந்ததும் நல்ல முகூர்த்தத்தில் வருவதாகச் சொல்லியிருக்கிறான். அவனுடைய வீரர்கள் இப்போதே வரப் போகும் திருமணத்தைக் கொண்டாடுகிறார்கள் போலிருக்கிறது!'' — இவ்விதம் கூறி விட்டுச் சம்புவரையர் சிரிக்கப் பார்த்தார். ஆனால் சிரிப்பு அரைகுறையாக நின்று விட்டது.

''வா! வா! நானே உன்னைச் சுரங்கப் பாதையில் கொண்டு போய் விட்டு விட்டு வருகிறேன். வழியில் ஒரு விநாடியாவது நீ தாமதிக்கக் கூடாது. வழியில் எங்கேயாவது குதிரை சம்பாதித்துக் கொண்டு விரைந்து போக வேண்டும்!'' என்றார்.



ம்புவரையர் கையில் ஒரு தீபத்தை எடுத்துக் கொண்டார். இருவரும் சுரங்கப் பாதையில் புகுந்தார்கள். விரைவாக நடந்தார்கள். மாளிகையின் மதில் சுவரைக் கந்தமாறன் கடந்த பிறகு, சம்புவரையர் அவனைக் கட்டித் தழுவி ஆசி கூறி விட்டுத் திரும்பினார். ''விளக்கு வேண்டுமா?'' என்று கேட்டதற்குக் கந்தமாறன் ''வேண்டாம், அப்பா! எனக்கு இந்த வழி நன்றாய்த் தெரிந்தது தானே? கண்ணைக் கட்டி விட்டாலும் போய் விடுவேன்!'' என்றான்.

அவன் சுரங்கப் பாதையில் கண்ணுக்கு மறைந்த பிறகு சம்புவரையர் திரும்பினார். வழியில் வேட்டை மண்டபத்துக்குள் புகுந்தார். அடுத்த அறையில் ஏதாவது சப்தம் கேட்கிறதா என்று காது கொடுத்துக் கேட்டார். ஒன்றும் கேட்கவில்லை. சிலகண நேரம் தயங்கி நின்றார். பிறகு, ஒரு முடிவான தீர்மானத்துக்கு வந்தவர் போல், பெருமூச்சு விட்டார். விளக்கை நன்றாகத் தூண்டி, வைக்க வேண்டிய இடத்தில் வைத்து விட்டு விரைந்து திரும்பிச் சென்றார்.

திரும்பச் சம்புவரையர் முன் கட்டுக்குச் சென்றதும், அந்தப்புரத்துப் பெண்களையெல்லாம் ஒன்று சேர்த்தார்.

அவர்கள் எல்லாரும் ஏற்கெனவே கலங்கிப் போயிருந்தார்கள். கண்ணீருங் கம்பலையுமாகக் கந்தமாறனால் அந்தப்புரத்தில் கொண்டு வந்து தள்ளப்பட்ட மணிமேகலையைக் கேட்டு அவர்கள் ஒருவாறு கரிகாலன் மரணத்தைப் பற்றித் தெரிந்து கொண்டிருந்தார்கள்.

''பெண்களே! நம் குலத்துக்கு என்றுமில்லாத பெரும் விபத்து ஏற்பட்டு விட்டது. எந்த நிமிஷத்திலும் நீங்கள் இந்த மாளிகையை விட்டுப் புறப்படச் சித்தமாயிருக்க வேண்டும். பல தினங்கள் காட்டிலும் மலையிலும் காலங் கழிக்கவும் துணிவு பெற வேண்டும். எல்லாரும் அவரவர்களுடைய ஆடை ஆபரணங்களை எடுத்துக் கொண்டு நிலா முற்றத்துக்கு வந்து சேருங்கள். அழுகைச் சப்தமோ, புலம்பல் சப்தமோ 'முணுக்' என்று கூடக் கேட்கக் கூடாது! தெரியுமா?" என்று எச்சரித்தார்.

பின்னர் சம்புவரையர் மாளிகையின் முன் வாசற்பக்கம் வந்தார். முன் வாசல் கோபுரத்தின் மேல் ஏறி வெளியிலே என்ன அவ்வளவு ஆரவாரம் என்று தெரிந்து கொள்ள விரும்பினார். அதற்கு அவகாசம் கிடைக்கவில்லை. ஏனெனில், அவர் முன் வாசலை நெருங்கும்போதே வெளியிலிருந்து வீரர்கள் கோட்டை வாசற் கதவுகளைத் தகர்த்துத் தள்ளி விட்டு உள்ளே தடதடவென்று புகுந்து கொண்டிருந்தார்கள். வாசற் காவலர்கள் அவர்களைத் தடுக்க முயன்று முடியாமல் கீழே விழுந்து



கொண்டிருந்தார்கள்.

இதுவல்லாமல், கோட்டையின் மதில் சுவர் மீது ஏறிக் குதித்தும் வீரர்கள் உள்ளே புகுந்து கொண்டிருந்தார்கள்.



ம்புவரையரின் உள்ளத்தில் பெரும் பீதியும் கலக்கமும் ஏற்பட்டன. கரிகாலன் கொலையுண்ட செய்தி ஒரு வேளை மலையமானுக்குத் தெரிந்து விட்டதா, என்ன? இதற்குள் எவ்விதம் தெரிந்திருக்கும்? — தெரிந்தால் தெரியட்டும். எப்படியும் தெரிந்துதானே தீர வேண்டும்? ஆனால் இன்னும் சிறிது நேரத்துக்கு இவர்களை இங்கேயே நிறுத்தித் தாமதப்படுத்தி வைக்க வேண்டும். அரை நாழிகை நேரம் தாமதித்தால் போதுமானது. அதற்குள் தாம் உத்தேசித்த காரியம் நிறைவேறி விடும்....

கோட்டை வாசலுக்கும் மாளிகை முகப்புக்கும் நடுவில் இருந்த நிலா முற்றத்தின் நடுவில் சென்று சம்புவரையர் கம்பீரமாக நின்றார். அவர் கையிலே கூரிய வாள் மின்னியது. அவருக்குப் பின்னால் ஏழெட்டு வீரர்கள் நெடிய வேல்களைப் பிடித்துக் கொண்டு நின்றார்கள். அவர்களில் சிலர் கையில் தீவர்த்தி வெளிச்சம் வைத்துக் கொண்டிருந்தார்கள்.

வாசற் கதவுகளை உடைத்துத் தகர்த்துக் கொண்டு முன்னால் வந்த வீரர்களைத் தொடர்ந்து திருக்கோவலூர் மலையமானும் பார்த்திபேந்திரனும் வந்தார்கள்.

நிலா முற்றத்தின் நடுவில் நின்ற சம்புவரையரைப் பார்த்து விட்டுப் பார்த்திபேந்திரன் மலையமானுக்கு அவரைச் சுட்டிக் காட்டினான். இருவரும் சம்புவரையரை நோக்கி வந்தார்கள்.

அருகில் வரும்போதே மலையமான், "சம்புவரையரே! இது என்ன நான் கேள்விப்படுவது? அத்தகைய பாதகத்தையும் செய்வீரா? ஓகோ! இது என்ன? கையில் வாளுடன் நிற்கிறீரே? உமது உத்தேசம் என்ன?" என்று கேட்டுக் கொண்டே வந்தார்.

"அந்தக் கேள்வியை உங்களிடம் கேட்கத்தான் நிற்கிறேன். உங்கள் உத்தேசந்தான் என்ன? வாசற் கதவைத் தகர்த்துக் கொண்டு வந்ததின் நோக்கம் என்ன? சற்று முன்னால் நான் வந்து தங்களை அழைத்தேன். நாளைக்கு நல்லவேளை பார்த்துக் கொண்டு வருவதாகச் சொன்னீர்கள்..."

"சம்புவரையரே! நல்லவேளை இப்போதே வந்து விட்டது. அதனாலேதான் வந்தேன். ஆதித்த கரிகாலன் எங்கே? வீர பாண்டியன் தலைகொண்ட வீராதி வீரன் எங்கே? சேவூர்ப் போர்க்களத்தின் வெற்றி வீரன் எங்கே? என் பேரன் எங்கே?" என்று மலையமான் கேட்டார்.

"என்னைக் கேட்டால், எனக்கு என்ன தெரியும்? இளவரசருக்கு இஷ்டப்பட்ட இடத்தில் அவர் இருப்பார். அந்த முரட்டுப் பிள்ளையிடம் நான் எவ்விதப் பேச்சு வார்த்தையும் வைத்துக் கொள்வதில்லை யென்றுதான் முன்னமே தங்களிடம் சொன்னேனே? பார்த்திபேந்திரனுக்கும் அது தெரிந்த செய்திதான்!"

"அடே சம்புவரையா! இவ்வாறு வீண் சாக்குப் போக்குச் சொல்லி ஏமாற்றப் பார்க்காதே! ஆதித்த கரிகாலனை உடனே கொண்டு வந்து எங்களிடம் ஒப்புவித்து விடு! இல்லாவிட்டால், உன்னுடைய இந்தக் கோட்டை கொத்தளம் மாளிகை எல்லாவற்றையும் இடித்துத் தகர்த்து மண்ணோடு மண்ணாக்கி விடுவேன்!" என்று திருக்கோவலூர் மலையமான் கர்ஜித்தார்.

"பார்த்திபேந்திரா! இந்தக் கிழவன் என்ன பிதற்றுகிறான்? இவனுக்குத் திடீரென்று பைத்தியம் பிடித்து விட்டதா? இளவரசரைக் கொண்டு வந்து இவனிடம் ஒப்புவிப்பதற்கு நான் யார்? இவன்தான் யார்? இளவரசரை நான் சிறைப்படுத்தி வைத்திருக்கிறேனா? அல்லது இவன் இளவரசரைச் சிறைப்பிடித்துக் கொண்டு போகப் போகிறானோ?" என்றார் சம்புவரையர்.



ர்த்திபேந்திரன் சிறிது சாந்தமான குரலில், "சம்புவரையரே! பதற வேண்டாம்! கிழவருக்குக் கோபம் வரக் காரணம் இருக்கிறது. இதோ இந்த ஓலையைப் பாருங்கள். தாங்களே தெரிந்து கொள்வீர்கள்!" என்று கூறிச் சிறிய ஓலைத் துண்டு ஒன்றைச் சம்புவரையர் கையில் கொடுத்தான்.

அவர் அதைப் பின்னால் பிடிக்கப்பட்ட தீவர்த்தியின் வெளிச்சத்தில் நன்றாக உற்றுப் பார்த்தார்.

"இளவரசர் ஆதித்த கரிகாலரின் உயிருக்கு ஆபத்து. உடனே படைகளுடன் வந்து காப்பாற்றவும்" என்று அந்த ஓலையில் எழுதியிருந்தது.

அதைப் படிக்கும்போதே சம்புவரையர் முகமெல்லாம் வியர்த்தது. முன்னர், கரிகாலனுடைய சடலத்தைக் கண்டதும் அவருடைய உடல் நடுங்கியது போல் இப்போதும் ஆடி நடுங்கியது.

"இது என்ன சூழ்ச்சி! இது என்ன சதி? யார் இப்படி ஓலை எழுதியிருக்க முடியும்?" என்று தடுமாறினார்.

"ஓலை யார் எழுதினால் என்ன? ஆதித்த கரிகாலரை உடனே இவ்விடம்



அழைத்து வா! அல்லது அவர் இருக்குமிடத்துக்கு எங்களை அழைத்துப் போ! இல்லாவிடில், என் வீரர்களை விட்டுத் தேடச் சொல்லட்டுமா?'' என்று கேட்டார் மலையமான்.

''ஆகட்டும், ஐயா! கரிகாலர் இருக்குமிடத்துக்கு உங்களை அழைத்துப் போகிறேன். பார்த்திபேந்திரா! உனக்கு அந்த

இடம் தெரியும். பழுவூர் இளைய ராணியின் அந்தப்புரத்துக்குப் போயிருக்கிறார் என்று சற்று முன் அறிந்தேன். அங்கே இவரை நீயே அழைத்துப் போ!'' என்றார் சம்பு வரையர்.

பார்த்திபேந்திரன், ''ஆம், தாத்தா! வாருங்கள்! நானே உங்களை அழைத்துப் போகிறேன்!'' என்றான்.



ப்படிச் சொல்லி விட்டுப் பார்த்திபேந்திரன் பழுவூர் இளையராணி நந்தினி தங்கியிருந்த அந்தப்புரம் இருந்த திக்கை நோக்கினான்.

''ஐயோ! இது என்ன?'' என்று அலறினான். ஏனெனில், அவன் பார்த்த திக்கில் அப்போது தீ கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்தது. தீயின் கொழுந்துகளுக்கு மேலே கரிய புகை மண்டலம் அடர்ந்திருந்தது.

அவன் பார்த்த திசையை எல்லாரும் பார்த்தார்கள். ''தீ! தீ!'' என்ற பீதி நிறைந்த ஒலி எல்லாருடைய கண்டங்களிலிருந்தும் கிளம்பியது.

பார்த்திபேந்திரன் சிறிது திகைப்பு நீங்கியவனாய், ''சம்புவரையரே! முதலில் இந்த ஓலையை நான் நம்பவில்லை. இப்போது நம்புகிறேன். ஏதோ சூழ்ச்சியும் சதியும் நடந்திருக்கின்றன. — பாட்டா! இந்தச் சதிகாரர்களை உடனே சிறைப்படுத்தச் சொல்லுங்கள்! நான் போய் இளவரசர் இருக்குமிடத்தைப் பார்த்துத் தேடி அழைத்து வருகிறேன்!'' என்று சொன்னான்.

சம்புவரையர் மறுபடியும் பழைய தைரியமான குரலில், ''ஆமாம், பார்த்திபேந்திரா! சூழ்ச்சியும் சதியும் நடந்திருக்கின்றன. ஆனால் செய்தவர்கள் நீங்கள். என் அரண்மனையின் கதவைத் தகர்த்துக் கொண்டு புகுந்தீர்கள். உங்கள் வீரர்களை ஏவி விட்டுத் தீ வைக்கும்படி சொல்லியிருக்கிறீர்கள். இளவரசருக்கு ஏதேனும் ஆபத்து என்றால், அதுவும் உங்களாலேதான் நேர்ந்திருக்க வேண்டும்! ஜாக்கிரதை! இதற்கெல்லாம் பழிக்குப் பழி வாங்கும் காலம் வரும்!'' என்றார்.

பார்த்திபேந்திரன் அவருடைய வார்த்தைகளைப் பொருட்படுத்தாமல் ஓடினான்.

அதே சமயத்தில் சம்புவரையர் வீட்டுப் பெண்கள் கும்பலாக மாளிகைக்குள்ளேயிருந்து நிலா முற்றத்துக்கு வந்தார்கள். அவர்களுடைய மனக் கலக்கத்தை அவர்கள் முக பாவங்கள் வெளிப்படுத்தின. ஆனால் யாருடைய குரலிலிருந்தும் ஒரு சிறு முனகலாவது விம்மலாவது கேட்கவில்லை.

அவர்களில் சிலருடைய கவனம் மாளிகையின் பின்புறத்தில் வெளிச்சமாகத் தெரிந்த இடத்திற்குச் சென்றது. ஒருவரையொருவர் சுட்டி அழைத்துக் கொழுந்து விட்டெரிந்த தீச் சுடரைக் காட்டினார்கள். மணிமேகலையும் அதைப் பார்த்தாள். உடனே ''ஐயோ! தீ! தீ! அவர் அங்கு இருக்கிறாரே!'' என்று அலறிக் கொண்டு அந்தத் திக்கை நோக்கி ஓடத் தொடங்கினாள். சம்புவரையர் குறுக்கிட்டு அவளை நிறுத்தினார். அவளுடைய முகத்தில் பளார் என்று ஓர் அறை கொடுத்தார். பிறந்தது முதல் யாரும் தன்னை இப்படி நடத்தி அறியாதவளான மணிமேகலை, — சம்புவரையரின் கண்ணுக்குக் கண்ணான செல்லப் பெண் மணிமேகலை, — தந்தையை வெறித்து நோக்கிய வண்ணம் ஸ்தம்பித்து நின்றாள்.

சம்புவரையர் சிறுது இரங்கிய குரலில், ''அசட்டுப் பெண்ணே! உனக்குத்தான் முன்னமே நான் எச்சரிக்கை செய்திருந்தேனே? ஏன் எனக்குக் கோபம் வரச் செய்கிறாய்?'' என்று கூறி விட்டு, ''அதோ பார்! நீ அலறி அடித்துக் கொண்டு ஓட வேண்டிய அவசியம் இல்லை என்பதைத் தெரிந்து கொள்!'' என்றார்.

சம்புவரையர் சுட்டிக் காட்டிய திசையிலிருந்து வந்தியத்தேவன் தள்ளாடித் தள்ளாடி நடந்து வந்து கொண்டிருந்தான். அவனுடைய தோளின் பேரில் ஆதித்த கரிகாலரின் உயிரற்ற உடலைச் சாத்தி எடுத்துக் கொண்டு வந்தான்.

சம்புவரையருக்கும் அவருடைய மகனுக்கும் நடந்த விவாதத்தில் கவனம் செலுத்திய மலையமானும் இப்போது வந்தியத்தேவனை நோக்கினார். அவன் மெள்ள மெள்ளத் தள்ளாடி வருவதையும், அவனுடைய தோளில் யாரையோ தூக்கிக் கொண்டு வருவதையும் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டு நின்றார். ஏனோ அவருடைய முதுமைப் பிராயம் அடைந்த உடம்பு நடுங்கியது. உள்ளத்தில் ஒருவிதத் திகில் உண்டாயிற்று. கிட்ட நெருங்கி வந்தவனைப் பார்த்து ஏதோ கேட்க விரும்பினார். ஆனால் நா எழவில்லை; தொண்டை அடியோடு அடைத்துக் கொண்டு விட்டது.

வந்தியத்தேவன் மலையமானைப் பார்த்துக் கொண்டே அவர் அருகில் வந்தான்.

''ஐயா! இதோ இளவரசர் கரிகாலர்! வீரபாண்டியன் தலைகொண்ட இந்த வீராதி வீரரை உயிரோடு தங்களிடம் கொண்டு சேர்க்க என்னால் இயலவில்லை. உடலை மட்டும் தீக்கிரையாகாமல் கொண்டு சேர்த்தேன். விதியினாலும் சதியினாலும் கொல்லப்பட்ட உங்கள் பேரப் பிள்ளையை இனி நீங்கள் ஒப்புக் கொள்ளுங்கள்!'' என்று கூறி விட்டு வந்தியத்தேவன் இளவரசர் கரிகாலரின் சடலத்தை மெதுவாகக் கீழே

இறக்கிப் படுக்க வைத்தான்.

உடனே தடால் என்று தானும் கீழே விழுந்து நினைவிழந்தான்.

கிழவர் மலையமான் இளவரசரின் உடலுக்கு அருகில் உட்கார்ந்தார். அவருடைய வீரத் திருமுகத்தைச் சற்று நேரம் உற்று நோக்கினார். திடீரென்று மலை குலுங்குவது போல் அவருடைய உடம்பெல்லாம் குலுங்கி அசைந்தது! அலைகடலின் பேராரவாரத்தைப் போல் அவருடைய தொண்டையிலிருந்து "ஐயோ!" என்ற சோகக் குரல் வந்தது.

தம் இரும்பையொத்த முதிய கைகளினால் தலையிலும் மார்பிலும் மாற்றி மாற்றி அடித்துக் கொண்டார்.

"என் செல்வமே! உன்னை மணக் கோலத்தில் பார்க்க வந்தேனே! பிணக் கோலத்தில் பார்க்கிறேனே!" என்று எட்டுத் திசையும் கிடுகிடுத்து நடுங்கும்படியாக அலறினார்.

பின்னர், அம் முதுபெருங் கிழவர் ஆதித்த கரிகாலன் பிறந்ததிலிருந்து நடந்த சம்பவங்களை ஒவ்வொன்றாகக் கூறிப் புலம்பினார். அவன் பிறந்த நாளில் நடத்திய கொண்டாட்டங்களைக் குறிப்பிட்டார். அவன் குழந்தையாயிருந்த போது தமது மடியிலும் கரங்களிலும் தோள்களிலும் கொஞ்சி விளையாடியதைச் சொல்லி அழுதார். அவனுக்கு வேல் எறியவும் வாள் பிடித்துச் சண்டை செய்யவும் தாம் கற்றுக் கொடுத்ததையெல்லாம் சொன்னார். பதினாறாவது பிராயத்தில் சேவூர்ப் போர்க்களத்தில் அவன் நிகழ்த்திய அஸகாய சூரத்தனமான வீர பராக்கிரமச் செயல்களை ஒவ்வொன்றாகக் கூறித் துக்கித்தார்.

"ஐயோ! பாண்டியனோடு நடத்திய அந்த வீரப் போர்களிலே நீ இறந்து வீர சொர்க்கம் அடைந்திருக்கக் கூடாதா? இந்தச் சண்டாளன் சம்புவரையனும் இவனுடன் சேர்ந்த சதிகாரர்களும் செய்த சூழ்ச்சிக்கு இரையாகியா மாண்டிருக்க வேண்டும்? அந்தோ! உன்னை நானே இவன் விருந்தாளியாகப் போகும்படி சொல்லி அனுப்பினேனே? எனக்கு வயதாகி விட்டது. உனக்கு இங்கே நண்பர்கள் வேண்டும் என்று எண்ணி, இவன் மகளை நீ மணந்து கொண்டால் உன் கட்சியில் இருப்பான் என்று நம்பி அனுப்பினேனே? சம்புவரையன் மாளிகைக்கு அனுப்புவதாக எண்ணிக் கொண்டு யமனுடைய மாளிகைக்கு விருந்தாளியாக அனுப்பி விட்டேனே? நான் அல்லவோ பாதகன்? நான் அல்லவோ உன்னைக்

## அருள்வாக்கு



உறவை சொந்தம், பந்தம், தொந்தம் என்று மூன்று பேரில் சொல்கிறோம். 'ஸ்வ' என்றால் 'தான்', 'தன்னைச் சேர்ந்தது — ஸ்வந்தம். அதாவது சொந்தம். பந்தம் என்றால் கட்டு. அன்பினாலே நம்மோடு கட்டுண்டிருப்பதால் உறவுக்காரர்களை பந்தம் என்கிறோம். 'ஆள் கட்டு' என்று கூடச் சொல்கிறோமல்லவா? இது நல்ல அர்த்தம். இன்னொரு அர்த்தமும் உண்டு. ஸம்ஸாரத்தைத் தானே ஜீவனுக்குப் பெரிய கட்டு என்கிறோம்? ஸம்ஸார பந்தம் என்கிறோம்? அந்த பந்தத்தில் கட்டிப் போடுவதில் முக்கியமாக இருப்பதாலும் உறவுக்காரர்களை பந்தம் என்கிறார்கள். 'பந்த'த்திலிருந்து வந்ததுதான் 'பந்து'. இவர்களுக்குள்ளே ஒருத்தனை ஸம்ஸாரத்தில் ரொம்பவும் கட்டிப் போடுவது பெண்டாட்டிதான் என்று நினைத்துத்தான் அவளையே ஸம்ஸாரம் என்று சொல்லும் வழக்கம் வந்திருக்கிறது! 'இந்த அம்மாள் இன்னாருடைய ஸம்ஸாரம்' என்கிறோம்!

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

கொன்றவன்?'' என்று கூறி மீண்டும் மீண்டும் தம் தலையிலே அடித்துக் கொண்டார்.

பின்னர் திடீரென்று சோகத்திலிருந்து விடுபட்டு ரௌத்திராகாரம் அடைந்து சுற்று முற்றும் பார்த்தார். ''அடே சம்புவரையா! உண்மையைச் சொல்! இளவரசர் எப்படியடா மாண்டார்? என்ன சூழ்ச்சியடா செய்தாய்? தேவேந்திரனே வந்து எதிர்த்தாலும் நேருக்கு நேர் நின்று அவனை வென்றிருக்க முடியாதே? எத்தனை பேரை அவன் பேரில் ஏவி விட்டாய்? அவர்கள் எங்கே மறைந்திருந்து எப்படியடா இந்த வீராதி வீரனைக் கொன்றார்கள்? உண்மையைச் சொல்லி விடு!'' என்று கர்ஜித்தார்.

சம்புவரையரும் கோபத்தோடு, ''கிழவா! உன் முதுமைப் பிராயத்தை முன்னிட்டுப் பொறுத்திருக்கிறேன். இளவரசர் எப்படி இறந்தார் என்று உனக்கு எவ்வளவு தெரியுமோ, அவ்வளவுதான் எனக்கும் தெரியும்! இளவரசர் சடலத்தைத் தூக்கிக் கொண்டு வந்தானே, அவனைக் கேட்டால் ஒரு வேளை சொல்லுவான்! என்னைக் கேட்பதில் என்ன பயன்?'' என்றார்.

''அடே! உன்னுடைய மாளிகையில் உன்னுடைய விருந்தாளியாக இருக்கும் போது இச் சம்பவம் நேர்ந்திருக்கிறது. நீ ஒன்றும் அறியாதவன் போலப் பேசுகிறாய். இதை யார் நம்புவார்கள்? நல்லது; உன்னைச் சுந்தர சோழ சக்கரவர்த்தி கேட்கும் போது இந்த மறுமொழியை அவரிடம் சொல்லு! வீரர்களே! இந்தச் சம்புவரையனையும் சிறைப்படுத்துங்கள். இவனுடைய மாளிகை, மதில் சுவர் எல்லாவற்றையும் இடித்துத் தரையோடு தரை ஆக்குங்கள்!'' என்று கிழவர் இடி முழக்கம் போன்ற குரலில் கட்டளையிட்டார்.

அப்போதுதான் திரும்பி வந்திருந்த பார்த்திபேந்திரன் மலையமானைப் பார்த்து ''ஐயா! இந்த மாளிகையை அழிக்கும் பொறுப்பு நமக்குக் கிடையாது. அக்னி பகவான் அந்த வேலையை மேற்கொண்டு விட்டார்! அதோ பாருங்கள்!'' என்றான்.

மலையமான் பார்த்தார். அந்தப் பெரிய மாளிகையில் ஒரு மூலையில் சற்று முன் காணப்பட்ட தீ வெகு சீக்கிரமாகப் பரவி வருவதைக் கண்டார். பிரம்மாண்டமாக வளர்ந்து வானளாவிக் கொழுந்து விட்டெரிந்த அப் பெருந் தீ மாட கூடங்களையும், மச்சு மெத்தைகளையும், கோபுரம் கலசங்களையும் விழுங்கிப் பஸ்மீகரம் செய்து கொண்டு மேலும் மேலும் இரை தேடி அதன் ஆயிரம் பதினாயிரம் செந்நாக்களை நீட்டிக் கொண்டு விரைந்து வருவதைக் கண்டார். அந்தக் கோர பயங்கரமான காட்சியைப் பார்த்த வண்ணமாகத் திருக்கோவலூர் வீரர்கள் பிரமித்து நிற்பதையும் கண்டார்.

''சரி! சரி! அக்னி பகவான் நமது வேலையை ஏற்றுக் கொண்டு விட்டார். நல்லது, பார்த்திபேந்திரா! உடனே புறப்படுவோம். மூன்று உலகமாளும் சுந்தர சோழ சக்கரவர்த்தி தமது மூத்த மகனைப் பார்க்க வேண்டும் என்று மூன்று வருஷமாகச் சொல்லி அனுப்பிக் கொண்டிருந்தார். என் மகள் வானமாதேவி இளவரசனை அழைத்து வரும்படி எனக்குச் சொர்க்க மேல் சொர்க்க அனுப்பிக் கொண்டிருந்தாள். உயிரற்ற இளவரசனின் சடலத்தையாவது அவர்கள் கடைசி முறை பார்க்கட்டும். இந்த வீராதி வீரனுடைய உடலைச் சண்டாள சம்புவரையனுடைய மாளிகையை விழுங்கிய அக்கினிக்கு நாம் இரையாக்க வேண்டாம். தஞ்சாவூருக்கு எடுத்துச் செல்வோம். சக்கரவர்த்தியின் சந்நிதானத்தில் கொண்டு போய்ப் போடுவோம். உயிர்க் களையிழந்த திருமுகத்தையாவது பெற்ற தாயும் தகப்பனாரும் பார்த்துப் புலம்பட்டும். இளவரசனைக் கொன்ற சண்டாளப் பாதகர்களுக்குத் தக்க தண்டனை சக்கரவர்த்தியே விதிக்கட்டும்!'' என்றார் மலையமான்.

(தொடரும்)

## தேர்தல் சின்னம் தீர்ந்து போச்சு!

முன்னாள் ஹரியானா முதல்வர் பன்ஸிலால் போட்டியிட்ட பிவானி தொகுதியில் மொத்தம் 121 வேட்பாளர்கள்! தேர்தல் சின்னங்களின் ஸ்டாக் தீர்ந்து போனதால் தேர்தல் கமிஷன் அவர்களில் சிலருக்காகப் புதிய சின்னங்களை உருவாக்க நேர்ந்தது! வோட்டுச் சீட்டு, ஒரு நாளிதழ் பக்கத்தின் அளவில் இருந்தது!

— வீக்லி.

தகவல்: — ரகு.



மனைவி, குழந்தை, குடும்பம் என்று பாசப்பிணைப்பின் சென்ட்டிமெண்ட் பிழிசல் காட்ட ஒரு பக்கம் ஆசை. சமூக விரோத சக்திகளைப் பழி வாங்கும் கதையும் தேவை என்று மறு பக்கம் வெறி. இரண்டையும் பிரிக் கயிறாய்ப் பின்னி ரசிகர்களைக் கட்டிப் போடப் பார்த்திருக்கிறார் டைரக்டர் சந்திரசேகர். கயிற்றிலே வலுவில்லை.

விஜயகாந்த் துப்பறியும் இன்ஸ்பெக்டர் என்றால் காக்கி உடைக்குள் மட்டும்தான். மப்டியில் வந்தாலோ மனிதர் மானாவாரியான மன்மத லீலைகளுக்கு ஆளாகி, மனைவி சீதாவிடம் ஈஷிக் கொண்டு அவருக்குத் தோழியாய் வரும் கௌதமியோடு பூசிக் கொண்டு எக்கச்சக்கக் கிளுகிளுப்புக் காட்டப் பார்க்கிறார். ஆனால் ஒன்று, தாய் வீட்டுக்குச் செல்வதாய்ப் பொய் சொல்லி விட்டுப் புற்றுநோய்ச் சிகிச்சைக்குக் கௌதமியுடன் அமெரிக்கா செல்லவிருப்பதை அறிந்ததும் அவர் துடிக்கும் துடிப்பு— விடும் கண்ணீர் அத்தனையிலும் பாசம் கொப்புளிப்பதை மறுப்பதற்கில்லை.

ஃபிப்டி ஃபிப்டி என்று தன் வாழ்க்கையில் எல்லாவற்றிலும் பங்கு கொடுப்பதாய்ப் பள்ளி நாட்களில் தன் தோழி கௌதமிக்கு வாக்குக் கொடுத்திருந்தாராம். இப்போது தன் கணவருக்குச் சமதையான காவல் அதிகாரியாய் வந்த கௌதமியைக் கண்டதும் அந்த ஃபிப்டி ஃபிப்டியை ஞாபகப் படுத்தி, இரண்டு பேரும் உரிமை கொண்டாடும் பேச்சு இருக்கிறதே— அடேங்கப்பா, ஆபாச எல்லையில் நின்று மூச்சு வாங்குகிறது.

அந்தப் புது பேபி கடித்துத் தின்னும் ஆசை தரும் குறுகுறு. இந்தப் பக்கம் அந்த இரண்டு நெகடிவ்களுக்காக ரத்தக் களரி ரணக் களரி ஆகிக் கொண்டிருக்கும் நேரத்தில், அது சாவகாசமாய் அதே நெகடிவ்களை ஆராய்ந்து பொம்மைக்குள் செருகும் போது படா படபடப்பு. அமெரிக்கத் திரைப்படத்திலிருந்து அப்படியே தர்ஜுமா!

விஜியின் ஊமைத் தங்கை, அவரைத் துரத்தித் துரத்திக் காதல் டாவு கட்டும் அலெக்சு ரேஷ் ஜோடி கதைப் பாட்டையை ஒட்டாமல் வந்தாலும், கடைசியில் அநியாயமாய் வில்லன் கோஷ்டியிடம் சிக்கி உயிரை விட்ட அளவில் கதாநாயகனுக்கு உக்கிரம் ஏற்றி உசுப்பிவிட ஒத்தாசை பண்ணியிருக்கிறது.

டெலஸ்கோப் துப்பாக்கியும் கையுமாய், 'என் ரூட்டே வேற' என்று தெலுங்கு ரேகையில் உச்சரித்துக் கொண்டு சகட்டுமேனிக்குச் சுட்டுப் பொசுக்கும் சரண்ராஜ் ஓகோவென்று சொல்கிற மாதிரி ஒன்றும் செய்யக் காணோம்.

குடும்ப மொத்தமும் ஏறிச் செல்லும் காரில் எதிரிகள் டைம்பாம் வைத்திருக்க, கேட்டைத் தாண்டியதும் அந்தக் குழந்தை பொம்மையை எடுத்து வருவதாய் இறங்கிச் செல்ல... படிப்படியாகப் பயங்கர சஸ்பென்ஸ் வளர்ந்து முடிவில் பகீர்!

பாடல்கள் கர்நாடக இதத்தோடு தென்றல் பாய்ச்சுகிறதே என்று பார்த்தால், மெல்லிசை மன்னராம். 'கஸ்தூரி மான்குட்டியாம்...' பாடல் மூன்று முறை துள்ளினாலும் ஒவ்வொரு முறையும் புது ஊற்று.

காமெரா அகலத் திரையில் ஊரும் போது கவனம் தேவை. க்ளோஸப் குறைய வேண்டும். அதிலும் தலையும் மோவாயும் சேதப்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

வித்தியாசமான சந்திரசேகரைத் தரிசிப்பது போல் ஆரம்பித்து, ஒரிஜினல் இமேஜில் தம்மை அடையாளம் காட்டிவிட்டார். பழைய நடைதான்!

— பி. எஸ். எஸ்.



அந்தச் சிறிய கிராமத்தின் ஆரம்ப அட்ராக்‌ஷனே, பிரம்மாண்டமான காத்தவ ராயன் சிலைதான். அதை யார், எதற்காக, கட்டினார்கள் என்பது சரித்திர ரகசியம். இருந்தும், அந்த ஊருக்குக் காத்தவராயன் தான் குலதெய்வம். மூச்சு விடுவதற்குக் கூடக் காத்தவராயனிடம் வேண்டிக் கொண்டுதான் விடுவார்கள்.

மாணிக்கவாசகர், காத்தவராயனை அண்ணாந்து பார்த்தார். தூண் போல, தடித்த கால்கள். அங்கங்கே செங்கல் தெரிந்தது. கரிய மீசையில் பெயிண்ட் உதிர்ந்து போயிருந்தது. வலது கையில் நீளமான கத்தி. அதில் கால் பாகம் காணா மல் போயிருந்தது. ஒரு காலை மடக்கி, காலைத் தொங்கவிட்டபடி அமர்ந்திருக்கும் காத்தவராயனை அண்ணாந்துதான் பார்க்க முடியும்.

''என்னங்க விசேஷம்? காத்தவராய னுக்குப் பலமா பூஜை நடத்தறீங்க?''

''நம்ம ஆனந்தனுக்கு இப்பத்தான் நல்ல வேலை கிடைச்சிருக்கு. பணத்துக்காக, சம் சாரத்தோடு ஊருக்கு வந்திருந்தான். ஸ்திரமா வேலையில்லாத பயலுக்குக் கல்யா ணத்தைப் பண்ணிப் போட்டோமேன்னு கவலைப்பட்டுக்கிட்டிருந்தேன். ஏதோ ராயன் புண்ணியம். நல்லது நடக்க ஆரம் பிச்சிருக்கு...''

தூரத்தில் ஆனந்தனும், ஈஸ்வரியும் சூட்கேசோடு வந்து கொண்டிருந்தார்கள்.

''இந்த வேலை கிடைக்க, நாயா பேயா அலைஞ்சு திரிஞ்சவன் நான். இந்த மனுஷன் காத்தவராயனைக் கட்டிக்கிட்டு அழ றாரு...''

''சும்மா புலம்பாதீங்க. சும்மா வேண் டிக்கிட்டுப் போறதினாலே என்ன குறைஞ்சு போயிடப் போறீங்க?''

''நீ ஆளுக்கேத்த மாதிரி கூட்டணி அமைக்கறதிலே ஜாலக்காரியாச்சே?''

''சரி, சரி, மாமா எதிரே புலம்பாம ஒழுங்காக் கும்பிட்டுக்கிட்டு அடக்கமா இருங்க...''

காஞ்சிப் பட்டு அண்ட் மல்லிகை வாசனை, கையில் பெட்டியோடு வந்த ஈஸ்வரியிடம்,

''அந்த ஆர்டர் எங்கேம்மா? இப்படித் தட்டிலே வை. ஒரு கற்பூரம் கொளுத் திடுவோம்,'' என்றார் மாணிக்க வாசகர்.

''பார்த்துக் கொளுத்துங்க. பக்தி மூ... திப் போய் அப்பாயின்ட்மெண்ட் ஆ... டரைக் கொளுத்திடப் போறீங்க!''

''ஏலே! குதிக்காதே! இனி நல்லது நடக் கோணும்னு ராயனை வேண்டிக்கோ.''

''வேலை கிடைச்சதே நல்ல விஷயம். இனி அவர்கள் சந்தோஷமாக வாழ்ந்தார் கள்னு எழுதிடலாம். இதுக்குப் போய் வேண்டிக்கிட்டு, பூசை பண்ணிக்கிட்டு, இவர் என்ன முருகன், பிள்ளையார் மாதிரி யூனிவர்சல் கடவுளா?''

ஈஸ்வரி கையைப் பிடித்து ஒரு ரகசிய அழுக்கு அழுக்கியதும் ஆனந்தன் அடங்கி னான்.

''சரி, சரி, பணத்தை எடு.''

மாணிக்கவாசகர், ஜிப்பாவுக்குள் கையை விட்டு நூறு ரூபாய் நோட்டுகளை எடுத்து, எண்ணி, தட்டில் வைத்துக் கும் பிட்டு, அதை எடுத்து ஈஸ்வரியிடம் கொடுத் தார்.

ஈஸ்வரி, காத்தவராயனை சாஷ்டாங்க மாக வணங்கி, மூன்று முறை வலம் வந்து, பணத்தை எடுத்து, மீண்டும் எண்ணி... (''சரியா எண்ணு. எங்கப்பன் ஜக ஃப்ராட்'') அதையும் அப்பாயின்ட்மெண்ட் ஆர்டரையும் பெட்டியில் வைத்து மூடி னாள்.

காத்தவராயன் டிரான்ஸ்போர்ட் பஸ், புழுதியோடு வந்து நின்றது.

''ஏன் மரமா நிக்கறே? ஏறேண்டி!''

''பஸ் பேரைப் பார்த்தீங் களா? ஒரு வேளை இதிலே ஏறாம போனா...'' தலை யில் அடித்துக் கொண் டான்.

டிரைவருக்குப் பக்கத்...



# காத்தவராயன்

தில் இருந்த நீள சீட்டில் இடம் கிடைத்தது. பெட்டியை ஈஸ்வரியிடமிருந்து பறித்து மேலே வைத்தான்.

''கையிலேயே வச்சுக்கலாங்க.''

''ஏன்? மேலே வச்சா என்னாகப் போகுது?''

''ஐயோ! ஐயோ! எதுக்கெடுத்தாலுமா இப்படி விவாதிப்பாங்க...? உங்க அப்பாரு ஆசைக்காகவாவது காத்தவராயனை நீங்க கும்பிட்டிருக்கலாம்.''

''என்ன. பிரசங்கம் பண்ணப் போறியா? காத்தவராயன் உன் மாமனா? மச்சானா?''

''ச ரி ப் ப ா. வாய் திறக்கலை. போதுமா?''

''சரி, டக்குன்னு சொல்லு. மொதல் மாச சம்பளத்திலே என்ன வேணும்?''

யோசித்தான். ஏதோ சொல்லவாயெடுத்தாள். பிறகு, சிரித்தாள். புன் சிரிப்பு. உள் அர்த்தம் பொதிந்த நக்கலான புன்னகை.

''மாட்டேன். என்ன வேணும்னு சொன்னா நீங்க கோபிப்பீங்க.

''புடைவை, நகைன்னு வழக்கம் மாறாமல் கேட்கிற வர்க்கம்தானே நீ. மிஞ்சிப் போனா முழம் பூ கேட்பீங்க. எனக்கு நிச்சயமா கோபம் வரும். ரியலிஸ்டிக் திங்கிங்கே கிடையாது.''

''எனக்கு எந்த எழவும் வேணாம்.



"பின்னே?"

"சின்னதா வேண்டுதல். வடைமாலை போட்டுப் பாலாபிஷேகம் செய்யணும்."

"யாருக்கு?"

"காத்தவராயனுக்கு..."

"போச்சுடா" என்று முகத்தைத் திருப்பிக் கொண்டான்.

பஸ் டிரைவரிடம் அலட்சியம் தென்பட்டது. சைக்கிளில் போனவர்களை ஒடுக்கி விழ வைத்தான். நடந்து போய்க் கொண்டிருந்தவர்களை அலறிக் கொண்டு ஓட வைத்தான்.

"ஏங்க, டிரைவரைக் கவனிச்சீங்களா?"

"ஏன்? அவனைப் பார்த்தால் உனக்குக் காத்தவராயன் நினைப்பு வந்துடுச்சா?"

"இல்லே... அவன் குடிச்சுட்டு ஓட்டற மாதிரி இருக்கு."

"குடிகாரன் குடும்பத்திலிருந்து வந்தவங்களுக்குத்தான் ஒருத்தனைப் பார்த்ததும் குடிச்சிருக்கானா இல்லையான்னு தெரியும். எங்கப்பா குடிக்க மாட்டாரு."

ஈஸ்வரிக்குக் கோபம் பொத்துக் கொண்டு வர, நறுக்கென்று கிள்ள, "ஹா" என்று இரைந்தான்.

ஆனந்தன் அலறியதற்கு நிஜமான காரணம், எதிரே வந்த பெரியார் பஸ்ஸோடு அவர்கள் பஸ் மோதியதுதான். பெரியார் பஸ் கொஞ்சம் வேகம் குறைவாக வந்ததால் அதிகச் சேதமில்லை. மேலிருந்து பெட்டிகள் கீழே சரிந்தன. ஈஸ்வரிக்கு நெற்றியில் நல்ல அடி. ஆனந்தன், இன்ஜின் மீது விழுந்து, தரையில் எக்கச்சக்கமான பேரில் ஒருவனாக மயங்கிக் கிடந்தான்.

களேபரம். கூச்சல், அழுகுரல்கள், வலியால் 'ஐயோ, ஐயோ'க்கள், முனகல்கள். ஈஸ்வரி, ஆனந்தனை இழுத்து, கன்னத்தைத் தட்டி......

காஷுவாலிட்டி பிரிவில் மருந்து தடவி, வேறு வண்டியில் ஏற்றி அனுப்பினார்கள். சென்னை சேர்ந்து, வீட்டுக் கதவைத் திறந்து கொண்டிருக்கும் போது —

"ஐயோ! ஈஸ்வரி!"

"என்னங்க? வலி ஜாஸ்தி ஆயிடுச்சா?"

"ஆமாம். இனிமேல்தான் ஆரம்பிக்கப் போகுது. பெட்டி மாறிடுச்சு..."

"ஐயோ! பணம், ஆர்டர் எல்லாம் அதிலே இருக்கே? இப்ப என்ன பண்றது? அப்பவே உங்கப்பா சொன்னபடி காத்தவரா...."

"போதும். உடனே அங்கே போயிடாதே. இப்ப என்ன, வேலை கிடையாதுன்னா சொல்லிடப் போறாங்க?"

"பணத்துக்கு என்ன பண்ணப் போறீங்க?"

"எல்லாத்துக்கும் வழியிருக்கு. இரு, இது யாரோட பெட்டின்னு பார்க்கலாம்."

ஒரு நாள் தேவைக்கான உடைகள் கொண்ட பூட்டப்படாத பெட்டி. வயதானவரின் உடைகள். வேறு எதுவும் அதில் இல்லை.

"பெட்டியைத் தூக்கும் போது கூடவா உங்களாலே கண்டுபிடிக்க முடியலை?"

"நானே, அடிபட்டு அதிர்ச்சியிலே வர்றேன், இதையெல்லாமா கவனிக்க முடியும்?"

கதவு தட்டப்படும் சப்தம், அவர்களை மௌனமாக்கியது. ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். நிமிட நேர இடைவெளிக்குப் பிறகு காலிங் பெல் ஒலிக்க — ஆனந்தன் கதவைத் திறந்தான்.

ஒரு கிழவர் நின்று கொண்டிருந்தார். கிராமம் என்று முகத்தில் தெரிந்தது. கையில் பெட்டி!

"சார், பெட்டி மாறிடுச்சுன்னு நினைக்கிறேன். அட்ரஸ் பார்த்து, யாரோ வழி சொன்னாங்க. நீங்கதானே ஆனந்தன்?"

உடனே சந்தோஷ அலைகள் முகத்தில் பட்டு ஒரு புன்னகைப் பூ பூத்தது.

"ரொம்ப தாங்க்ஸ். உள்ளே வாங்க. ஏதாவது சாப்பிட்டுட்டுப் போங்க..."

"பரவாயில்லைங்க. எனக்கு அவசரமா வேலை இருக்கு. நான் வர்றேன்."

"ஐயா, உங்க பேரு?"

ஐயா சிரித்தார். பிறகு —

"காத்தவராயன்" என்றார்!




"குறட்டை விட்டு நிம்மதியாய்த் தூங்குகிறான்" என்று பேசுகிறோம். ஆனால் இது உண்மையல்ல என்று மேற்கு ஜெர்மானிய மருத்துவ ஆய்வுகள் கூறுகின்றன. குறட்டை விடுவோருக்கு ஆழ்ந்த நித்திரை கிடைப்பதே இல்லையாம். அடிக்கடி தூக்கத்தில் மூச்சு விடுவது நின்று போக, ரத்தத்தில் பிராண வாயு அளவு குறைய, உடம்பு, அவர்களை எழுப்பி விட்டு விடுகிறதாம்! இதனால் தூக்கத்தின் விளைவாகக் கிடைக்க வேண்டிய ஓய்வு, அவர்களுக்குப் போதிய அளவு கிடைப்பதேயில்லை. குறட்டை விடுகிறவர்களின் எடை அதிகரிக்கும், இரத்த அழுத்தம் கூடுதலாகும், இருதயமும் பாதிக்கப்படலாம். இவர்களில் திடுமென்று சீக்கிரமே மரணத்தைத் தழுவுகிறவர்களின் எண்ணிக்கை அதிகம் என்று புள்ளி விவரங்கள் நிரூபிக்கின்றனவாம்!

— ஜெர்மன் டிரிப்யூன்

— ஷியாம்

# ஸ்லீப்பர் பாதுகாப்பு




## கொசுக்களை ஒழித்திட குட் நைட் ஒன்றுதான் சர்வதேச SP வாக்குறுதி தருவது.

ஜப்பான் நாட்டு சுமிட்டோமோ விலிருந்து இறக்குமதி பெற்ற இரசாயனப் பொருள்கள் மற்றும் உள்-உறுப்புக்கள். என்றும் மாறாது நிலைநிறுத்தப்படும் சர்வதேச நிர்ணயத் தரங்கள்.

இவற்றுக்கெல்லாம் அங்கீகாரமாக குட் நைட்டுக்கு, பெருமதிப்புமிக்க SP முத்திரை வழங்கப்பட்டது: தரத்தின் சின்னமாக, உலகில் **மிகச் சிலவற்றுக்கே அளிக்கப்பட்ட விருது. இதனை இந்தியாவில் வென்றுள்ளது குட் நைட் ஒன்றுதான்.**

**சுமிட்டோமோவின் கறாரான சர்வதேச நிர்ணயத் தரங்களுக்கு இணங்க, சுமிட்டோமோ பைரத்ராயிடு** கொண்டு தயாரிக்கப் பட்டது குட் நைட் என்பதற்கு உத்தரவாத முத்திரை எஸ்பி.

ஆகவேதான், மிகப்பல மக்கள் கொசுக்களுக்கு "குட் நைட்" போட்டு விடை கொடுக்கின்றனர். அவர்களுக்குத் தெரியும் ஸ்லீப்பர் பாதுகாப்புக்கு நம்பிக்கையானது குட் நைட்.




இனிய தூக்கம் இன்பக்கனவு யாவருக்கும் குட் நைட்

# குட் நைட்




SP என்றால்
சுமிட்டோமோ பைரத்ராயிடு.

போட்டிக் கதை — 15

# மீன்கள்

"மூந்நூறு ரூபாய் எடுத்திட்டு வா... அப்ளிகேஷன்ல கையெழுத்துப் போட்டுட்டுப் போ... இன்னும் ஒரு மாசத்துல உனக்கு லோன் வாங்கித் தர்றதுக்கு நான் ஜவாப்தாரி... அதை விட்டுட்டு இப்படி மாத்தி மாத்திப் பேசிக்கிட்டு என்னோட நேரத்தை வீணாக்காதே..."

சொல்லி முடித்து விட்ட கணபதி, கோப்புகளில் ஆழ்ந்து போனான்.

ஏழுமலை இன்னமும் நின்று கொண்டிருந்தான்.

முடியாது! அவனால் நிச்சயம் முடியாது! மூந்நூறு ரூபாய் என்பது அவனுக்கு மிகப் பெரிய விஷயம். அவன் ஒரு சாதாரண கூலிக்காரன். அன்றாடங்காய்ச்சி... எப்படியாவது வாழ்க்கையில் முன்னேற வேண்டும் என்கிற ஆர்வம் உடையவன். அதனால் தான் ஏதாவது அரசாங்கக் கடன் வாங்கி, டவுனில் ஒரு பெட்டிக் கடையோ, மளிகைக் கடையோ வைத்து, பிழைப்பு நடத்திப் பார்க்கலாம் என்ற எண்ணம் தோன்றியது அவனுக்கு.

கணபதி, அந்தக் கிராமத்தின் ஊர் நல அதிகாரி. அரசாங்கம் வழங்கும் மான்யக் கடன்களுக்கெல்லாம் அவன்தான் நபர்களைப் பரிந்துரை செய்ய வேண்டும். எப்போதுமே மான்யக் கடன்கள் வாங்குவதற்குப் பலத்த போட்டியிருக்கும். ஒரு கடன் வாங்கக் குறைந்தது ஐந்தாறு பேர் மோதுவார்கள். ஆனாலும், அதிகமாக லஞ்சம் தருபவர்களுக்குத்தான் அந்தக் கடன் பரிந்துரை செய்யப்படும் என்று சொல்லத் தேவையில்லை.

அதைத்தான் இப்போது கணபதி கேட்கிறான். கை மேல் மூந்நூறு ரூபாய் கொடுத்தால் இன்னும் ஒரு மாதத்தில் ஏழுமலைக்கு ஆறாயிரம் ரூபாய் கடன் கிடைத்து விடும். அதில் இரண்டாயிரம் தள்ளுபடியாம்!

"நான் என்ன எனக்கா கேட்கிறேன்? எனக்கும் மேலதிகாரி இருக்கார். ஆபீஸ் கிளார்க் இருக்கார். அப்புறம், பியூன், மசால்ஜின்னு எல்லாருக்கும் தரணும்பா... நீ கொடுக்கிற பணத்திலே எனக்கு ஒரு பைசா கூடக் கிடைக்காது தெரிஞ்சுக்கோ..." என்றான் கணபதி.

"அதுக்கில்லை... ஏழை பாழைங்களுக்குத்தான் கடன் தரணும்; காசெல்லாம் எதுவும் வாங்கக் கூடாதுன்னு சட்டம் இருக்குதாமே" என்று தலையைச் சொறிந்து கொண்டு பேசி முடித்தான் ஏழுமலை. எப்போதோ பேப்பரில் படித்த விஷயத்தை ஞாபகத்தில் வைத்துக் கொண்டு இப்போது அதைத் தன் துணைக்கு அழைத்தான் அந்தக் கூலிக்காரன்.

கணபதி உஷாராகி விட்டான். "டேய் என்கிட்டேயே சட்டம் பேசறியா நீ...? இதோ பார் பச்சையாவே சொல்றேன். உனக்குத் தான் கடன் தரணும்னு எனக்கு ஒண்ணும் தலைவிதி இல்லை. தெரியுதா...? என்னவோ ஏழை ஏழைன்னு சொல்றியே.. நீ ஒருத்தன் தான் ஏழையா? உன்னை மாதிரியே எத்தனை கூலிக்காரப் பசங்க இருக்காங்க. அவங்கள்ல யாருக்காவது ஒருத்தருக்குக் கூட நான் கடன் தரலாம், தெரிஞ்சுக்கோ" கோபத்தில் படபடவென்று பேசினான் கணபதி.

ஏழுமலை அரண்டு போய் விட்டான். கணபதியின் வார்த்தைக்கு மறு வார்த்தை பேச முடியாமல் திணறித்தான் போய் விட்டான். இனி, அவனால் ஒன்றுமே செய்ய முடியாது. எப்படியாவது மூந்நூறு ரூபாய் புரட்டினால் காரியம் நடக்கும். வீணாகத் தர்க்கம் செய்து கொண்டிருப்பதில் எந்தவிதப் பலனுமில்லை.

அடுத்த இரண்டு நாட்களும் எங்கெங்கோ அலைந்தான் ஏழுமலை. எங்குமே அவனால் பணம் புரட்ட முடியவில்லை.

ஏழுமலைக்குத் தெளிவாகி விட்டது. அவனால் இந்த வருடம் நிச்சயமாகக் கடன் வாங்க முடியாது. காலை ஏழு மணியிலிருந்து பொழுது சாயும் வரை அவனும், அவன் பெண்சாதியும் முதலாளி வீட்டில் மாடாய் உழைக்க வேண்டும். இன்னும் அவன் கூலிக்காரனாகவே இருந்து கஷ்டப்பட வேண்டும்.

தன் ஆசையில் மண் விழுந்து விட்ட ஏமாற்றத்திலும், விரக்தியை மறைத்துக் கொண்டு, கணபதியிடம் வந்தான்... "அடுத்த தடவையாச்சும் கடன் வர்றப்ப சொல்லுங்க சார்... ஏதோ அதுக்குள்ளற யாச்சும் கூலி வேலை செய்தாவது பணம் சேர்த்து வைக்கிறேன்" என்று சொல்லி விட்டுப் போய் விட்டான் ஏழுமலை.

அவன் போனதும், கணபதி, பக்கத்திலிருந்த கணக்குப் பிள்ளையிடம், "எல்லாம் கழுவற மீனுலையே நழுவற மீனுங்க. மூந்நூறு ரூபாய் கொடுக்க முடியலையாம் இவனால. காசே கொடுக்காம கடன்

வாங்க முடியாதான்னு நம்பளையே ஆழம் பார்க்குறானுங்க பசங்க....'' என்றான்.

''நீங்க சொல்றது நூத்துக்கு நூறு சரி'' ஏற்கெனவே மூக்குப் பொடியை உறிஞ்சியிருந்த கணக்குப் பிள்ளை இப்போது தும்மல் போட்டார்.

''என்ன கணக்குப் பிள்ளை தும்மல் லாம் பலமா இருக்கு....'' என்று கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தார் பெரியசாமி. அவர் பின்னால் சுமார் இருபத்தைந்து வயது மதிக்கத்தக்க ஓர் இளைஞனும் உள்ளே வந்தான்.

பெரியசாமி அந்த ஊர் பஞ்சாயத்துத் தலைவர் மட்டுமின்றிக் கட்சியின் ஒன்றியச் செயலாளரும் கூட. சென்ற ஆண்டு கட்சித் தலைவரின் அறுபதாவது பிறந்த நாளின் போது ஆயிரம் பேருக்கு இலவசச் சாப்பாடு, வேட்டி, துண்டு, புடைவை என்று கொடுத்துப் பெரிய வட்டாரங்களில் திடீரென்று பிரபலமாகி விட்டார்.

பெரியசாமியைப் பார்த்ததும் கணபதியும், கணக்குப் பிள்ளையும் ஒரே சமயத்தில் எழுந்து, ''வாங்க, வாங்க...'' என்று இரு கரங்களும் கூப்பியபடி வணக்கம் செலுத்தினர். கணபதி தான் உட்கார்ந்திருந்த நாற்காலியைத் தலைவருக்குக் கொடுத்து விட்டுக் கணக்குப் பிள்ளையின் பக்கத்தில் போய்ப் பெஞ்சில் அமர்ந்து கொண்டான்.

''என்ன சார் நம்ப ஜனங்களுக்கு லோனெல்லாம் கரெக்டா தர்றீங்களா...?'' என்றார் பெரியசாமி, கணபதியைப் பார்த்தபடியே.

''அதெல்லாம் கரெக்டா நடக்குது, தலைவரே!''





## தேர்தல் டியூட்டியால் வாக்குரிமை போச்சு!

வோட்டுப் போடப் போன போது வர்க்குச் சாவடியில் நின்ற போலீஸ் காரரைக் கேட்டேன்: ''நீங்க வோட்டுப் போட்டாச்சா?''

''எங்கே?'' என்று சலித்துக் கொண்டார் அவர். ''இங்கு டியூட்டி முடியவே ஐந்து மணி ஆயிடும். அப்புறம் எனக்கு வோட்டு இருக்கும் இடம் சென்று எப்படி வோட்டுப் போடுவது? நான் மட்டுமா? என்னைப் போல் இன்று டியூட்டியில் இருக்கும் பல்லாயிரக்கணக்கான போலீஸ்காரர்கள், தேர்தல் அதிகாரிகள் நிலையும் இதுதான்'' என்றார்.

இது அநீதி அல்லவா? இவர்கள் எல்லோருமே முதல் நாளே தபால் மூலம் வோட்டுப் போட்டுவிட அரசு ஒரு ஏற்பாட்டைச் செய்ய முடியாதா?

— தம்பி

''சரி ஒரு அப்ளிகேஷனை எடுத்து நம்ப மச்சினன் பையன்கிட்டே கையெழுத்து வாங்குங்க...'' அருகிலிருந்த பையனைச் சுட்டிக் காட்டி விட்டு லாவகமாக ஒரு சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டான் பெரியசாமி.

கணபதி, ஒரு நிமிடம் யோசித்துக் கொண்டிருக்கும்போதே தலைவர், கணக்குப் பிள்ளையிடம் திரும்பி, ''நம்ப வண்டிக்காரன் காட்டைக் கிரயம் பண்ணலாம்னு இருக்கேன். பத்தாயிரம் தேவைப்படுது. அதுக்குத்தான் இப்படிக் கடன் போட்டு வாங்கிக்கலாம்னு...'' என்றார்.

''ம்... அரசாங்கப் பணத்திலேயே அஞ்சு ஏக்கர் நிலம் வாங்கிட்டீங்க...'' என்று காவிப் பற்கள் வெளியே தெரியச் சொல்லிச் சிரித்தார் கணக்குப் பிள்ளை.

''இதோ பாரு பிள்ளை... ஆத்துல போற தண்ணியை அம்மா குடிச்சா என்ன ஆயா குடிச்சா என்ன... நாமெல்லாம் கட்சிக்கு என்ன கணக்கு வழக்கு பார்த்துட்டா செலவு பண்றோம்...? ஏதோ நாம பதவியில் இருக்கறப்ப இது மாதிரி வாங்கிப் பயன்படுத்திக்கிட்டாத்தான். அப்புறமா, நாம்ப கேட்டா கூட நமக்குக் கிடைக்காது, தெரிஞ்சுக்கோங்காணும்'' என்றார் புகையை வெளியே விட்டுக் கொண்டே.

கணபதி நெடுநேரம் தயங்கிய பிறகு விண்ணப்பப் படிவத்தை வெளியே எடுத்தான். அவனுக்குத் தெரியும், இது முறையல்ல என்பது. பெரியசாமியின் உறவினர் ஒருவர் கூட இரண்டு கடன்களுக்குக் குறைந்து வாங்கியது கிடையாது. சட்டப்படி ஒரு குடும்பத்துக்கு மூவாயிரத்துக்கு மேல் மான்யம் வழங்கக் கூடாது. ஆனால் பெரியசாமி ஒருவரே இதுவரை கணக்குப் பிள்ளை சொன்ன அளவுக்கு மான்யம் வாங்கியிருப்பார். இது ஆபத்து. வெளியே தெரிந்தால் பிரச்னை. வேலைக்கே உலை வைத்து விடும் விஷயம். மேலும், தலைவருக்குக் கடன் வாங்கித் தருவதில் அவனுக்கு எந்தவித 'ஆதாயமும்' கிடையாது.

''பயப்படாதீங்க சார்,... நான் சேர்மேன் கிட்டே எல்லாத்தையும் கேட்டுட்டேன். நம்ப கட்சி ஆட்சியில் இருக்கிற வரைக்கும் எதுக்கும் கவலைப்படாதீங்க. நீங்க புதுசு. உங்களுக்கு அவ்வளவா தெரியாது. கணக்குப் பிள்ளைகிட்டே கேளுங்க எல்லாம் சொல்லுவார்'' என்றபடியே அருகிலிருந்த அந்தப் பையனிடம் ஒரு கையெழுத்தை வாங்கி, விண்ணப்பப் படிவத்தைக் கணபதியிடம் கொடுத்தார் தலைவர்.

''வரட்டுங்களா...? கணக்குப் பிள்ளை, வரட்டுமா...? வாடா ராஜாமணி'' என்றபடியே படிகளிறங்கி நடந்து சென்றார். அவர் போவதையே பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தனர் கணபதியும், கணக்குப் பிள்ளையும்.

''இருந்தாலும் மனுஷனுக்கு இவ்வளவு பேராசை கூடாது'' என்றார் கணக்குப் பிள்ளை.

கணபதிக்கு ஆச்சரியமாய் இருந்தது. அவர் இருந்தவரை 'ஜால்ரா' அடித்துக் கொண்டிருந்தவன் இப்போது 'பிளேட்டை' மாற்றுகிறான். ஆனாலும், இவனை நம்ப முடியாது. இவனுக்கு இதே வேலை. கோள் மூட்டி விடுவதும், 'பற்ற வைப்பதும்' இவனுக்குக் கைவந்த கலை. கடைசியில், பதவியும் பணமும் எங்கிருக்கிறதோ அங்கு போய்ப் பசையாய் ஒட்டிக் கொள்வான்.

கணபதி திடீரென்று ஏதோ முடிவுக்கு வந்தவனாய், சற்றுத் தூரத்தில் மைதானத்தில் விளையாடிக் கொண்டிருந்த பையன் ஒருவனை அழைத்தான்.

''டேய் சேரியில் இருக்கானே கந்தன் மவன் ஏழுமலை... அதுதான் அந்த செம்பட்டையன்டா... அவனை நான் வரச் சொன்னேன்னு கூட்டியா'' என்றான்.

கணக்குப் பிள்ளை ஏன் என்று புரியாமல் விழித்தார்.

ஏழுமலை வந்தான்.

''இந்தா ஏழுமலை, இதிலே ஒரு கையெழுத்துப் போடு'' என்றபடியே கணபதி, அவனிடம் ஒரு விண்ணப்பப் படிவத்தை நீட்ட, ''ஐயா... காசு...'' என்று இழுத்தான் அவன்.

''அதெல்லாம் எதுவும் பேசாதே. நான் சொன்னதை நீ செய்.''

ஏழுமலை கையெழுத்துப் போட்டு விட்டுப் போனதும் கணக்குப் பிள்ளை, ''என்ன சார் -ஒரு கடன்தான் இருக்குதுன்னு சொன்னீங்க. தலைவர்கிட்டேயும் வாங்கி வச்சிருக்கீங்க... இப்ப இவன்கிட்டேயும் கையெழுத்து வாங்கி வச்சிருக்கீங்களே...'' என்றார்.

''ஆனா ஒருத்தருக்குத்தான் கிடைக்கும்.''

''யாருக்கு?''

''ஏழுமலைக்கு'' என்று சொல்லியபடியே தலைவரின் விண்ணப் படிவத்தைக் கிழித்துக் காற்றில் பறக்க விட்டான் கணபதி.

கணக்குப் பிள்ளை அவனை ஆச்சரியத்துடன் பார்த்தார். பிறகு, ''இவனுங்கள்ளாம் நழுவற மீனுங்க சார்... இவன்களுக்காகவா நீங்க தலைவரையே பகைச்சுக்கப் போறீங்க...?'' என்றார் சற்றே பரிதாபமான குரலில். சற்று முன் கண் முன்னே நடந்த நிகழ்ச்சியின் அதிர்ச்சியிலிருந்து இன்னும் மீளவில்லை அவர்.

''நீங்க சொல்றது தப்பு கணக்குப் பிள்ளை'' என்று ஆரம்பித்தான் கணபதி. ''இந்த அப்பாவி மக்களெல்லாம் மீன்கள் இல்லை... தவளைங்க... வாழ்க்கையில் ஒவ்வோர் அடியா தத்திப் போற தவளைங்க... இதுகளால் தண்ணீரிலும் இருக்க முடியும், தரையிலும் வாழ முடியும். ஆனா, உங்க தலைவர் இருக்காரே அவர் தான் மீனினம். பணம், பதவி, அந்தஸ்து அப்படிங்கற தண்ணி இல்லாட்டா அந்த மீன்களெல்லாம் செத்துப் போயிடும். காய்ஞ்சு கருவாடா மாறிடும்...''

கணக்குப் பிள்ளை பேசாமலிருந்தார்.

''அவங்க இன்னைக்குப் பெரிய ஆளா இருக்கலாம். ஆனா, நாளைக்கே மக்கள் தூக்கி எறிஞ்சுட்டாங்கன்னா சாதாரண மனுஷன்ல ஒருத்தனாயிடுவாங்க. ஆனா, நாங்க அப்படியில்லை. என்னைக்குமே இந்தப் பதவியிலே இருக்க வேண்டிய அரசாங்கப் பிரதிநிதிங்க... மக்களுக்கு நன்மை செய்யத்தான் நாங்க கடமைப்பட்டிருக்கோமே தவிர சந்தர்ப்பவாதிகளுக்கும், சுயநலக்காரங்களுக்கும் துணை போறதுக்கு இல்லை.''

கணக்குப்பிள்ளை எழுந்தார். கணபதி, இப்படித் திமிரென்று ஏதேதோ பேசுவது அவருக்குப் புரியவில்லை; பிடிக்கவுமில்லை.

''நான் வரேன் சார்'' என்று சொல்லி விட்டுக் கணக்குப்பிள்ளை நடையைக் கட்டிய போது கணபதிக்குத் தெரியும், அவர் இப்போது நேராக எங்கே போவார் என்று. அதைப் பற்றி அவன் கவலைப்படவில்லை. இனி, எப்பேர்ப்பட்ட மீனையும் இழுத்து வந்து கரையில் தூக்கி எறிந்து விடலாம் என்கிற நம்பிக்கை அவனுள் பிறந்து விட்டது.

# வல்லமை தாராயோ?

7

"என்ன விஷயமா என்னைச் சந்திக்கணும்?'' என்றாள் வந்தனா.

"நேர்ல விரிவாச் சொல்லலாம்னு விரும்புறேன்.'' என்றான் அரவிந்த்.

"உங்க ஆபீசுக்கு வரட்டுமா?''

"ஆமாம். இன்னிக்கு எத்தனை மணிக்கு உங்களுக்குச் சௌகரியப்படும்?''

"சவ்னிங் நாலு மணிக்கு.''

"சரி, வாங்க."

வந்தனா போனை வைத்து விட்டு இன்வாய்ஸ் டைப் செய்யத் துவங்க, அருகில் குப்தா குண்டூசியால் பல் குத்திக் கொண்டே செக்குகளில் கையெழுத்திட்டுக் கொண்டிருந்தான். பேங்கிற்குப் புறப்படும் தோதில் கக்கத்தில் லெதர் பேகுடன் பெத்தநாய்னா அவனுக்காகக் காத்திருந்தார்.

குப்தா பேனாவை மூடிவிட்டு நிமிர்ந்தான்.

"ஏமி பெத்த நாய்னா, பத்திரமா கொண்டாந்துடுவீங்களா?''

அவர் செப்படி வித்தைக்காரனின் உதவியாள் போல் உடனே ஆமோதிப்பாகத் தலையசைத்தார்.

"இருங்க'' என்றான், "வந்தனா, இக்கடராம்மா'' என்று இவளை அழைத்து, "அம்பதாயிரம் பேங்கில் எடுக்கணும். நீயும் இவரோட போய்ட்டு ஒஸ்த்தாவா? பெருமாள் மாடு மாதிரி தலையாட்டுவாரு. வெளக்கோட்டை விட்டுடுவாரு. ரெண்டு பேருமா போங்க. ஆட்டோவில் போங்க.''

ஆட்டோவில் செல்லும் போது வந்தனா அவரைக் கேட்டாள், "பெத்த நாய்னா சார், குப்தா எப்பவும் உங்களை விரட்டிக்கிட்டே இருக்கார், மட்டம் தட்டிக்கிட்டே இருக்கார். உங்களுக்குக் கோபமே வர்றதில்லையா?''

பெத்த நாய்னா வழக்கம் போல் தன் மீசைக்குள் சிரித்து விட்டு, "குப்தாவோட அப்பா எனக்குத் தம்பி முறை வேணும்மா. அவருக்கு நான் எவ்வளவோ கடன் பட்டிருக்கேன். பணமா இல்லை, பாசமா. ...தத்தாரி மாதிரி நான் திரிஞ்சிட்டிருந்தேன் ஒரு காலத்தில. அப்போ என் குடும்பத்தைக் காப்பாத்தினது குப்தாவோட அப்பாதான். இப்ப சொல்றதுக்கு என்ன. எவ்வளவு காசு கிடைச்சாலும் சூதாடித் தோத்துட்டு வந்து நிப்பேன். என் வீட்டையே விக்க வேண்டிய நிலைமை வந்தப்போ குப்தாவோட அப்பா தான் கை கொடுத்தாரு. அதிலேர்ந்து சூதாட்டத்தை விட்டேன். குடும்பத்தை நினைக்க ஆரம்பிச்சேன். அவ மகராசியா போய்ச் சேர்ந்துட்டா. ரெண்டு பொம்பளைப் பிள்ளைங்களையும் கட்டிக் கொடுத்துட்டேன். மாப்பிள்ளைங்க தங்கம். அவங்களோட வரச் சொல்லிக் கூப்பிடறாங்க. எனக்குத்தான் இஷ்டமில்லை. குப்தா வீட்டிலேயே தங்கிட்டுச் சேவகம் பண்றேன். குப்தா சும்மா அப்படி வெரட்றானே தவிர, என் மேல் அவ்வளவு பாசம் உண்டு!''

திரும்பி வந்தனாவின் கண்களில் கலக்கத்தைப் பார்த்த பெத்த நாய்னா, "என்னம்மா, எதுக்கு நீ கண் கலங்கறே?'' என்று கேட்டார்.

"எங்கப்பா நினைவு வந்திச்சி.''

"ரொம்ப பாசமா இருந்தவராம்மா?''

வந்தனா சட்டென்று சிரித்தாள்.

"ஏம்மா சிரிக்கிறே?''

"இந்தியாவுக்கு ஆகஸ்ட் பதினைஞ்சுன்னா, எங்க குடும்பத்துக்கு மட்டும் ஏப்ரல் பத்தொம்போதுதான் சுதந்திர நாள் சார்.''

"ஏன், அன்னிக்கு என்ன?''

"அன்னைக்குத்தான் எங்கப்பா நீலகண்டன் இறந்த நாள். அப்படி ஒரு கேரக்டரை நீங்க பார்த்திருக்கவே முடியாது. நீங்க ஒரு கட்டத்தில சூதாட்டத்திலேர்ந்து திருந்தினதாச் சொன்னீங்களே, அவர் கடைசித் துடிப்பு நிக்கிற வரைக்கும் திருந்த நினைச்சதுகூட இல்லை. ரெண்டு வயசுக்கு வந்த பொண்ணுங்க வீட்ல இருக்கிறப்போ தன் ஆசை நாயகியை வீட்டுக்குள்ளே கொண்டு வந்து வச்சிக்கிட்ட அப்பாவை நீங்க கேள்விப் பட்டிருக்கீங்களா?''

"அட கண்றாவியே! அப்புறம்?''

"அவளுக்கும் சேர்த்துச் சமையல் செஞ்ச காவிய மனைவி எங்கம்மா! நானும், என் தங்கையும் ஹாஸ்டல்ல போய்த் தங்கினோம். எங்கப்பாவோட ரெண்டு வருஷம் நான் பேசவே இல்லை. வாதம் வந்து செத்தப்போ, எனக்கு ஒரு சொட்டுக் கண்ணீர் கூட வரலை. இன்னும் கொஞ்சம் நரக வேதனை எல்லாம் பட்டுட்டுச் செத்திருக்கக் கூடாதான்னுதான் இருந்தது. ச்சே! சரியான சுயநலம் பிடிச்ச இனம் சார் உங்க இனம்.''

"உங்கப்பனைச் சொன்னே, நியாயம்! இப்படி பொத்தாம் பொதுவா எல்லாருமே அப்படின்னு சொன்னா எப்படி? பொம்பளையால் கெட்ட குடும்பம் எத்தனை காட்டட்டும் உனக்கு?''

"பார்த்தீங்களா, உடனே ரோஷம் வந்து வாதம் பண்ண ஆரம்பிச்சிட்டீங்க. வேணாம். இது பெரிய வாதம். இலேசுல முடியாது. என்னைப் பொறுத்த வரைக்கும் எப்படா பொணம் விழும்னு பறந்திட்டிருக்கிற கழுகு மாதிரிதான் அனேகமான ஆம்பளைங்க இருக்காங்க.''

பாங்க் வாசலில் ஆட்டோ நிற்க, இருவரும் இறங்கிக் கொண்டார்கள்.

க்ரீம் கலர் சூட்டில் இருந்தான்

பட்டுக்கோட்டை பிரபாகர்

அரவிந்த்.

இரண்டு கைகளாலும் ஏந்தி, நிதானமாகப் பருகி முடித்து, பீங்கான் கோப்பையை வைத்துவிட்டு, உதடுகளை ஒற்றிக் கொண்டாள் வந்தனா.

அரவிந்த் தன் கோப்பையுடன் எழுந்து கொண்டு அருகில் ஜன்னலின் பிளாஸ்டிக் திரையின் குமிழை இழுத்ததும், பட்டை பட்டையாகத் திரை பிரிந்து கொள்ள, கண்ணாடி தாண்டி மாலை வெளிச்சம் உள்ளே வந்தது.

''மிஸ். வந்தனா, நம்ம சந்திப்புக்குப் பிறகு ரேடியோவிலே உங்க குரலை விடறதேயில்லை. நிகழ்ச்சி எவ்வளவோ 'போரா' இருந்தாலும் உங்க குரல் அதைத் தூக்கி நிமிர்த்திடுது. என்னோட விளம்பர ஏஜெண்ட்டைக் கூப்பிட்டு உங்க குரலைப் போட்டுக் காட்டினேன். வித்தியாசமான, கவர்ச்சிகரமான உச்சரிப்புன்னு அவரும் பாராட்டினார். விளம்பரங்களுக்குப் பின்னணிக் குரல் கொடுக்க உங்களுக்கு விருப்பமுண்டான்னு கேட்கத்தான் வரச் சொன்னேன்.''

''ரேடியோவில நான் வேலை செய்யறது ஒரு பொழுதுபோக்கு மாதிரிதான் சார். என் குரலை வியாபாரமாக்கச் சிந்திச்சதில்லை.''

''அதிலே தப்பு என்ன இருக்கு? உங்க குரல் உங்களுக்கு ஒரு சொத்து. சினிமான்னா தன்மானம் பாதிக்க வாய்ப்பு இருக்கு. விளம்பரத் துறையில் உங்களுக்குரிய மரியாதை நிச்சயமாக் கிடைக்குமே. எங்க கம்பெனிக்காகப் புதுசா விளம்பரப் படம் எடுத்திருக்கோம். இருபது செகண்ட்ஸ். அதுக்கு உங்க குரலைப் பயன்படுத்தணும்னு நான் ஆசைப்படறேன் — ரெண்டு மணி நேரம்கூட ஆகாது... நான் வற்புறுத்தலை; யோசிச்சுச் சொல்லுங்க.''

மறுநாள் பதில் சொல்வதாகச் சொல்லி எழுந்து கொண்டாள் வந்தனா.

''உங்களுக்கு வீடு எங்கே?''

''ட்ரிப்ளிகேன்ல.''

''நான் அந்தப் பக்கம்தான் போறேன். வாங்க, உங்களை ட்ராப் பண்ணிடறேன்.''

தன் கார் சாவியுடன் எழுந்து கொண்டான் அரவிந்த்.

''நோ, தேங்க்ஸ். நான் என் சைக்கிள்ல வந்திருக்கேன்,'' என்று கைகுவித்துவிட்டு வந்தனா வெளியேறி நடக்க... அரவிந்த் சற்று சுழித்து வந்து தன் காரில் அமர்ந்தான்.

**அ**ந்தச் சிறிய, குளிரூட்டப்பட்ட அறையில் பதினாறு எம். எம். திரையில் அந்த விளம்பரப்படம் ஓட, தலையில் ஹெட்போன் அணிந்த வந்தனா படத்தில் அந்தப் பெண் தன் கணவனிடம் பேசுகிற





●● ஒவ்வொரு பறவை இனத்திற்கும் இறைவன் உணவை அளிக்கிறார். ஆனால், அந்த உணவை அவர் அப் பறவையின் கூட்டிற்குள் கொண்டு போய் வைப்பதில்லை.

— ஹாலண்ட்.

தகவல்: எஸ். குருமூர்த்தி.

காட்சியில், தன் வசனத்தை ஏற்ற இறக்கத்துடன் பேசினான்: "பெருமாள் மாடு மாதிரி தலையை ஆட்டாம சீக்கிரமா போய்த் தயாள் அண்ட் கோ பிரஷர் குக்கர் வாங்கிட்டு வாங்க. அப்பத்தான் உங்களுக்கு ராத்திரிக்குச் சோறு. புரிஞ்சுதா? கிளம்புங்க."

மூன்றாவது முறை பேசியது ஓக்கேயானதும் புன்னகையோடு அரவிந்த் அமர்ந்திருந்த நாற்காலியருகே வந்தாள் வந்தனா.

எங்க விளம்பரங்களில் பொய் இருக்காதுன்னு சொல்லிட்டு, இன்னைக்கு இவ்வளவு பெரிய பொய் பேசச் சொல்றீங்களே, சார்!"

"இந்த வசனத்துலே எது பொய்?"

"எந்த வீட்ல பொண்டாட்டி தன் புருஷனை இவ்வளவு தூரம் விரட்டறா? இதே மாதிரி நிஜ வாழ்க்கையில சொல்வாளா ஒரு பொண்டாட்டி? 'என்னடி விரட்டறே, எனக்குத் தெரியும் எப்ப வாங்கித் தர்றதுன்னு' அப்படின்னு அதட்ட மாட்டான்?"

"உண்மைதான். விளம்பரத்தில மிகையா, வித்தியாசமா இருந்தால் கவனிக்கிறாங்க. ரசிக்கிறாங்க. அதுக்காகத்தான் இப்படி. அட! கற்பனையிலயாவது கொஞ்சம் எதிர்த்துப் பேசட்டுமே... ஏன் மேடம், பெண்கள் முன்னேறியிருக்காங்களா நிஜமா?"

பையன் கொண்டு வந்த குளிர் பானத்தை வேண்டாம் என்று கூறிவிட்டு வந்தனா, "ஆமாம்னு சொல்லலாம். இல்லைன்னும் சொல்லலாம். எது முன்னேற்றம்ங்கிறதே நிறைய பேருக்குப் புரியலை. ஆணுக்குச் சமமா வேலை பார்க்கிறதும், நாகரிகமா உடுத்திக்கிறதும் முன்னேற்றமா? இப்பவும் பெண் யாரையாவது சார்ந்திருக்கிறவளாகத்தான் வளர்க்கப்படறா... பிரியாணிக்காகவே ஆடு வளர்க்கிற மாதிரி பல வீடுகளிலே பெண்களைக் கல்யாணத்துக்காகவே வளர்க்கிறாங்க சார். அவளுக்குக் கல்யாணத்தைத் தவிர வேறே லட்சியங்களையே ஏற்படுத்தறதில்லை. சரி, அதே கனவுகளோட, கற்பனைகளோட வளர்றாளே, கல்யாணம்னு வர்றப்போ அவ விருப்பத்தை எத்தனை பேர் கேட்கிறாங்க? அவ புருஷனை நிச்சயிக்கிறது வரதட்சணை. பெண்கள் முன்னேறிட்டா இருந்தால் தற்கொலைகளோ, ஸ்டவ் வெடிப்புகளோ இவ்வளவு அதிகமாகலாமா? பொறக்கிறப்பவே எக்கச்சக்கமா கோழைத்தனத்தையும் சுமந்துக்கிட்டுப் பொறக்கிறா. என் ஃப்ரெண்டு ஒருத்தி காதலன் ஏமாத்திட்டார்ன்னு தூக்கிலே தொங்கினா. அவ குடும்பம் சீர்குலைஞ்சி நிக்குது. அவன் ஜாலியா அடுத்து ஏமாந்தவ எவ மாட்டுவான்னு அலைஞ்சிக்கிட்டிருப்பான். திமிர்ப் பிடிச்ச பசங்க!"

"என்னங்க இவ்வளவு உணர்ச்சிவசப்பட்டுட்டீங்க? பொதுவாத் திட்டாதீங்க. நான் எல்லாம் பெண்ணை மதிக்கிறவன் மேடம். அவங்க சிரமங்களை அனுதாபத்தோட பார்க்கிறவன். என் கம்பெனிகளிலே பெண் தொழிலாளர்களுக்கு எவ்வளவு சலுகைகள் கொடுத்திருக்கேன் தெரியுமா?"

தன் கைப்பையை எடுத்துக் கொண்ட வந்தனா, "நான் புறப்படட்டுமா?" என்றாள்.

"இருங்க," என்று அரவிந்த் தன் பிரீஃப் கேஸை, மடியில் வைத்துத் திறந்து செக் புத்தகம் எடுத்து அவள் பெயரை எழுதி, தொகை நிரப்பி, கிழித்து நீட்டிய செக்கை வாங்கி வியந்தாள், "ரெண்டாயிரமா?" என்று!

"உங்க குரலுக்கு எவ்வளவும் கொடுக்கலாம்!"

"நோ! நான் விசாரிச்சேன். இந்த மாதிரி வேலைகளுக்கு மற்ற ஆர்ட்டிஸ்ட்டுகளுக்கு ஐந்நூறு ரூபாய்க்கு மேல தர்றதில்லைன்னு சொன்னாங்க. எதுக்காகப் பின்னே இவ்வளவு தர்றீங்க?"

"ஜஸ்ட்... ஒரு பிரியத்தின் பேரிலேன்னு வச்சிக்கங்களேன். வாங்கிக்குங்க. உங்க குரல் எனக்கு நிறையச் சம்பாதிச்சுக் கொடுக்கும்."

"பரவாயில்லை. எனக்கு ஐந்நூறு ரூபாய்க்குச் செக் எழுதுங்க, வாங்கிக்கிறேன்."

அரவிந்த் சிரித்துக் கொண்டே வேறு செக் எழுதிக் கொடுத்தான். வந்தனா அதைப் பெற்றுக் கொண்டு போனதும் எழுந்து தன் விளம்பர ஏஜென்சி நண்பனிடம் சொல்லிக் கொண்டு வெளியேறிக் காருக்கு வந்தான். காரில் கேஸட் கேட்டுக் கொண்டிருந்த கிருஷ்ணன், "வந்தனாவுக்கு நவீன கண்ணகின்னு பேர் சூட்டியிருக்கேன்ப்பா. 'வாங்க, வீட்ல விட்டுடறேன்'னு சொன்னேன். மு றை ச் சி ட் டு ப் போறாப்பா," என்றான்.

அரவிந்த் அமர்ந்து ஸ்டார்ட் செய்து, "கிருஷ்ணா, எனக்கு அவளோட தன்மானம் பிடிச்சிருக்கு. தன் மேல் வைச்சிருக்கிற நம்பிக்கை பிடிச்சிருக்கு. ஆர்ப்பாட்டமில்லாத அறிவும், அடக்கமான அழகும் பிடிச்சிருக்கு," என்றான்.

"எதுக்காகப் பிச்சிப் பிச்சிச் சொல்லிக்கிட்டு? வந்தனாவை உனக்கு மொத்தமாப் பிடிச்சிருக்கு. அப்படித்தானே?" என்ற கேள்விக்கு அரவிந்த் உற்சாகமாகத் தலையசைத்து, "ஆமாம்" என்றான்.

(தொடரும்)

# மௌனப் போராட்டம்



எரிச்சல் கொள்ளாமல், பொறுமை இழந்து வெளியேறாமல் ஊன்றி உட்கார்ந்து படம் பார்க்கும் சகிப்புத் திறன் மிக்கவர்களுக்குக் கடைசி நாற்பது நிமிடம் போல் ஒரு விருந்து காத்திருக்கிறது:

ஓர் உண்மைக் கதையை உசுப்பி யெடுக்கிற விதமாய்ப் படம் பண்ணியிருக்கிறார்கள்.

காட்டுவாசிப் பெண் துர்க்கா ஒரு குள்ளநரி அதிகாரியால் ஏமாற்றப்பட்டு கர்ப்பிணியாகி, ஏமாந்தது தெரியாமல் அந்தப் பட்டணத்து வாசியைச் சந்திக்க வர, வழியில் 'உமன்ஸ் லிப்' கோஷ்டியொன்று அவளது உதவிக்கு வந்து, உரியவர்களிடம் அவளைச் சேர்த்து வைக்க முயல, வில்லன் கோஷ்டி துர்க்கா மேல் திருட்டுப் பழி சுமத்தி ஜெயிலுக்கு அனுப்புகிறார்களா?

நிறைசூலியாய் விடுதலை பெறும் துர்க்கா, அப்போது மேற்கொண்ட மௌனவிரதத்தைப் பதின்மூன்று மாசத்துக்கப்புறம்தான் — அவளுடைய மௌனப் போராட்டத்தில் வெற்றி பெற்ற பிறகுதான் கலைக்கிறாள். உண்மைக் கதைக்கு விசுவாசம்.

அந்தக் காட்டுவாசிப் பெண்ணுக்குக் காந்திஜியைப் பற்றியோ அவருடைய அகிம்சைப் போராட்டத்தைப் பற்றியோ ஒன்றும் தெரிந்திருக்க முடியாது. ஆனால் யதார்த்த அறிவும் நியாயத்துக்குப் போராடுகிற உறுதியும் நிறையவே இருக்கிறது. விளைவு? மடியில் குழந்தையை வைத்துக் கொண்டு கெடுத்தவன் வீட்டு வாசலில் உட்கார்ந்தவள் உட்கார்ந்தவள்தான்.

'அவளைத் தரதரவென்று இழுத்து ரோடில் விட்ட போதும் சரி, கொதிக்கும் வெந்நீரை அவள் மேல் கொட்டி கொப்புளிக்க வைத்த போதும் சரி, அவள் சற்று அசந்த நேரத்தில் குழந்தை வாயில் நெல்லைக் கொட்டிக் கொல்லப் பார்த்த போதும் சரி — அவள் அசையவில்லை! மௌனப் போராட்டம்.

பலன்? அலை அலையாய் அவளுக்கு ஆதரவு பெருகும் விதம்; எதிர்ப்புச் சக்திகளை ஆதரவாளர்கள் முறியடிக்கும் கோலாகலம்; பத்திரிகைக் குரலில், மக்கள் கோஷத்தில் உலுக்கப்பட்ட சட்டமன்றம், உடனடி நடவடிக்கையாய் விசாரணைக் குழு அமைத்து அனுப்புகிறது — உண்மையொளி சுடர் தெறிக்கிறது.

பூர்ணம் விசுவநாதன் நீதிபதி ஸ்தானத்தில் கனிந்த குரல் எழுப்பியிருப்பது படுபாந்தம். ஒட்டுதல். இந்தத் தெலுங்கு டப்பிங் படத்தில் இவர் குரல் மட்டும் அசல்.

அந்தப் பிஞ்சு முகக் கதாநாயகி யமுனா வைரப் பூவாய் மௌனப் போராட்டம் நடத்துவது மனசை இரண்டொரு நாளைக்காவது என்னமோ பண்ணிக் கொண்டிருக்கும் போலிருக்கிறது.

ஒருவழியாய்ப் படக் கதை முடிந்த பிறகுதானா அந்த மூலக் கதையின் உண்மைக் கதாநாயகி சவீதாவைக் காட்டிப் பேச வைக்க வேண்டும்? எட்டு நாள் கைப்பிள்ளையுடன் பதின்மூன்று மாதங்கள் மௌனப் போராட்டம் நிகழ்த்தினாளாமே — அந்த மதிப்புக்குரிய தாயை மனசார தரிசிக்க வாய்ப்பளிக்கும் வகையில் ஆரம்பத்திலேயே காட்டினால் என்ன குடிமுழுகிப் போய் விடும்?

— பி. எஸ். எஸ்.

# தி.மு.க.ஆட்சிக்கு ஆபத்து ஏற்படுமா?

* அ. சண்முகசுந்தரம், சிட்லபாக்கம்.

? 'ஏர் இந்தியா விமானங்களில் வில் அம்பு சின்னம் மட்டும்தான் சூரியனாக மாற்றப்பட்டிருக்கிறது; மகாராஜா விளம்பரங்கள் தொடரும்' என்று அதிகாரிகள் விளக்கியது உமக்குத் தெரியாதா?

! தராசின் ஒரு தவறான பதிலைத் திருத்தியதற்கு நன்றி. மகாராஜாவுக்கு ஆபத்தில்லை என்பதில் குதூகலிக்கும் அதே நேரத்தில் CENTAUR என்ற கிரேக்கப் புராண வடிவத்தினை உள்ளடக்கிய, கலையழகுமிக்க சின்னம் மடிந்து போனதில் எனக்கு வருத்தமே.

* ஆர். நெடுஞ்செழியன், சென்னை — 41.

? தி. மு. க. ஆட்சிக்கு ஆபத்து ஏற்படுமா?

! மத்தியில் தேசிய முன்னணி ஆட்சி அமைந்து விட்டால் ஆபத்தில்லை. தார்மிக ரீதியில் இவராகவே ராஜினாமா செய்தால்தான் உண்டு. அதுவும் இல்லை என்று பத்திரிகை நிருபர்களுக்குப் பட்டவர்த்தனமாகத் தெரிவித்து விட்டார். என்றாலும் தமிழகத்தைப் பொறுத்தமட்டில் நாடாளுமன்றத் தேர்தல் முடிவு தி. மு. க. ஆட்சியின் தலை மீது தொங்கும் ஒரு கத்திதான் — மறுப்பதற்கில்லை.

* சா. ரமேஷ்பாபு, லால்குடி.

? உமக்கு அறிவுள்ள பெண்ணைப் பிடிக்குமா? அழகுள்ள பெண்ணைப் பிடிக்குமா?

! அன்பு என்பது அழகு, அறிவு இவற்றை எடை போட்டுப் பிறப்பதல்ல. இவற்றுக்கு அப்பாற்பட்டு அன்பு செலுத்தப் பழகிக் கொண்டால் குறைபாடு உள்ளவர்களையும் நமக்குப் பிடிக்கும் என்பதைப் புரிந்து கொள்வோம். அவர்களாலும் சமுதாயத்துக்குப் பயன் உண்டு என்று தெரிந்து கொள்வோம்.

* எஸ். லதா, இராமநாதபுரம்.

? ஊ. வி. ரிஷிமூலம் தொடர் எப்படி?

! வசனங்கள் சில இடங்களில் வியட்நாம் வீடு சுந்தரத்தின் கைவண்ணத்தில் 'பளிச்' சென்று இருந்தாலும் 'அவுட் டேட்டட்' கதையையும் பிராமணர்களே மறந்து விட்ட பிராமண வழக்குச் சொற்களையும் இன்று ரசிக்க முடியவில்லை. சில 'பளிச்'சுக்களுக்காகப் பல எரிச்சல்களைத் தாங்க வேண்டியுள்ளது!

* டி. சந்திரன், ஈரோடு.

? தேர்தல் முடிவையொட்டி ஒருவர் பாதி மொட்டையடித்துக் கொண்டிருக்கிறார்; ஈரோடு பகுதியில் இன்னொருவர் இரட்டை இலை வடிவத்தில் தலைமுடி வெட்டிக் கொண்டிருக்கிறார்... இந்த அபத்தங்கள் பற்றி...?

! அதான், நீங்களே 'அபத்தம்' என்று சொல்லி விட்டீர்களே! நல்லவேளை, அவர் பகுகுணா லோக்தள் அனுதாபியாக இல்லை. இருந்திருந்தால், உழவன், மாடுகள், ஏர் என்று ஏகப்பட்ட சமாசாரங்களைத் தலையில் வெட்டிக் கொள்ள நேர்ந்திருக்கும்!

* ஆ. புகாரி, தக்கோலம்.

? பாக் டெஸ்ட் கிரிக்கெட்டின் போது ஸ்ரீகாந்த், கபில்தேவ் ஆகியோர் தாக்கப்பட்டது குறித்து?

! ஒரு பார்வையாளர் அப்படி அசட்டுத்தனமாக நடந்து கொண்டது ஆச்சர்யமளித்தது எனில், அவரைத் தடுக்க முற்படாமல் காவலர்கள் கைகட்டி நின்றது அதிர்ச்சி அளித்தது. அந்த முதல் அசம்பாவிதத்துக்குப் பிறகேனும் பாக் அரசு விழித்துக் கொண்டு தக்க பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்திருந்தால் சரி.

* க. ராம்குமார், கும்பகோணம்.

? இந்தத் தேர்தலில் நடந்த வன்முறைகள் பற்றி?

! வருந்தத்தக்கதுதான்; ஆனால் காரணங்களை யோசிக்க வேண்டும். தலைவர்

ஆபத்தில்லை!







* எங்கு 'விக்'?

* ஆட்சிக்கு ஆபத்து!

## நீங்கள் கேட்டவை — தராசு

கள் கொள்கைப் பிரசாரம் செய்வதை விடுத்து, தனிப்பட்ட காழ்ப்புணர்ச்சியுடன் எதிராளியை வன்முறை வார்த்தைகளால் தாக்கும் போது, தொண்டர்கள் வன்முறை ஆயுதங்களால் தாக்குவதில் வியப்பில்லை. ''வெற்றி தோல்வி முக்கியம்தான்; ஆனால் அதைவிட முக்கியம், இந்தத் தேர்தல் அமைதியாக நடந்தேறி, இந்தியா சர்வ தேசப் பாராட்டைப் பெறுவதாகும்'' என்று ஒரு கட்சித் தலைவராவது கூறினாரா? இல்லையே!

*** எம். கருணாகரன், சென்னை — 33.**

**? அரசியலில் மக்களுக்கு உண்மையிலேயே விழிப்புணர்ச்சி ஏற்பட்டுள்ளதா?**

! விழித்துக் கொள்ள வேண்டும் என்ற உணர்ச்சி நிச்சயமாக ஏற்பட்டுள்ளது; ஆனால் அவர்கள் இன்னும் உறக்கம் கலைந்து எழவில்லை. சுப சீக்கிரத்தில் அதுவும் நடக்கும்.

*** ஆர். சுப்பராவ், திருக்கோவலூர்.**

**? 'தேசிய முன்னணி என்பது பதினாலு வகை பருப்புக்களைக் கொண்ட அவியல்; அது எந்த நீரிலும் வேகாது' என்று ராஜீவ் கூறியிருக்கிறாரே?**

! 'எங்கள் கங்கை நீரில் அது வேகும்' என்று உ. பி., பீகார் மக்கள் உணர்த்தி விட்டார்களே!

*** எஸ். மனோகரன், சங்கமங்கலம்.***

**? பரம்பரைப் புகழைப் புழுதியில் புரட்டிய ராஜீவ் காந்தி, எந்த இடத்தில் 'வீக்' ஆனார்?**

! தம்மைத் திருத்தத் துணிந்தவர்களை விரோதிகள் எனக் கருதி, ஜால்ராக்களையே நண்பர்கள் என்று எண்ணிய போது.

*** சு. ராம்குமார், கும்பகோணம்.**

**? எது சாத்தியம்? எது அசாத்தியம்?**

! மத்திய அரசு அமைவது சாத்தியம்; அது நீடிப்பது அசாத்தியம். நீடித்து நிலைக்கச் செய்வது அகடிதகடனா சாமர்த்தியம்!

*** மஞ்சுதேவன், கல்கத்தா.**

**? தற்போதைய டெஸ்ட் தொடர் எப்படி?**

! கஷ்டப்பட்டால் டிரா செய்து விடலாம் என்ற தெம்பு வந்திருக்கிறது. இன்னும் கொஞ்சம் முயன்றால் வெற்றியும் அடையலாம் என்ற நம்பிக்கை வரவில்லையே!

*** ரூ. 20 பரிசு பெறுபவர்:**
**எஸ். மனோகரன்,**
**பூந்தோட்டத் தெரு,**
**சங்கமங்கலம் அஞ்சல்,**
**நாகை வட்டம்,**
**சிக்கல் — 611 108.**



* தட்டிக் கேட்பதே பணி!



* ஓரம் கட்டப்படுகிறார்?

*** த. சத்தியநாராயணன், சென்னை.**

**? ராமராஜனை மேடம் ஓரம் கட்டுகிறாரே, ஏன்?**

! இன்னோர் எம். ஜி. ஆர். உருவாகிவிடப் போகிறாரே என்ற அச்சமாக இருக்கலாம்! நல்லதுதான். சினிமா அரசியல் இந்தத் தலைமுறையோடு போகட்டும். அடுத்த தலைமுறை டி. வி. — விடியோ அரசியலில் மயங்காமலிருக்கட்டும்! கொள்கை அரசியல் மட்டுமே கொடி கட்டிப் பறக்கட்டும்!

*** சி. இளஞ்செழியன், லோயர் கேம்ப்.**

**? 'ஆளும் கட்சியைத் தட்டிக் கேட்பது தான் என் கட்சியின் கொள்கை' என்கிறாரே டி. ராஜேந்தர். அப்படியானால் நாட்டின் நலத்துக்குத் தொண்டாற்ற அவர் கட்சி ஆரம்பிக்கவில்லையா?**

! ஆளும் கட்சியைத் தட்டிக் கேட்பது என்பது ஒரு முக்கியமான பணிதான். அதுவும் நாட்டு நலனுக்குத் தொண்டாற்றும் காரியம்தான். ஆனால், விமர்சனம் குறை கூறுவதாக மட்டும் இல்லாமல், ஆக்கபூர்வமான யோசனைகளை உள்ளடக்கியதாக இருக்க வேண்டும்.

*** ஆ. மாதவராமன், சோளிங்கர்.**

**? சினிமா, அரசியல், அரசுப்பணி போன்ற துறைகளில் நுழையாமற் போய் விட்டோமே என்று வருத்தப்பட்டது உண்டா, ஸார்?**

! இவை அனைத்தையும் நடுநிலையில் நின்று அலசி, கருத்துச் சொல்லக் கூடிய பத்திரிகைத் துறையில் நுழைந்ததற்காகச் சந்தோஷப்பட்டது உண்டு!

# கிலேசம்

"அதோ, அந்த வாடகை சைக்கிள் கடையோரமா நிக்கிறா பாரு. அவள் தான்."

எண்ணெய்ப் பிசுக்கு அறவே அற்றுக் காடெனப் பறந்த அந்த செம்பட்டைக் கேசமும், சாயம் போன, கிழிந்த சட்டையும், மார்பில் ஒற்றைக் கோடாயும், முழங்கால்களுக்கு மேலேயுமாய்க் கசங்கிச் சுருண்டு கிடந்த பல நாள் அழுக்கேறிய புடைவையும் அவளைச் சுற்று வட்டாரத்தில் நின்ற, நடமாடிக் கொண்டிருந்த மக்களிடமிருந்து சட்டெனத் தனியாகப் பிரித்துக் காட்டின.

"இந்த மாதிரி ஏரியாவில் இப்படி நின்னா என்னவாகும்? யோசிச்சுப் பாரு.

விஸ்வத்தின் குரலில் விசனமிருந்தது: உலகம் முழுமையும் பூக்களாலாகி இருப்பதாய்க் கனாக் கண்டு ஏங்கும் இளகிய மனம் கொண்ட தோழன். வாழ்க்கையை விற்று விட்டுக் கிடைக்கும் சம்பளம் வயிற்றுக்கே போதாத நிலையில் யாருக்கு என்ன உதவி என்னவென்று செய்ய? என்று திகைத்துத் திணறும் மத்தியத்தர வர்க்க மனமுள்ளோர் பிரதிநிதிகளில் ஒருவன்.

"எனக்கிருப்பது எத்தனை நாட்களோ இங்கே — தெரியாது. எனில், நாளொன்றுக்கு இருபத்திநாலு மணி நேரம். இதில் எட்டு மணி நேரம் தூங்க. எட்டு மணி நேரம், உயிரைத் தக்க வைத்துக் கொள்வதற்காக உயிரைப் பலியிடுவதாய் உழைக்க. போய் வர மூன்று மணி நேரம். அலைத்த சோர்வு தணிய ஒரு மணி நேர ஓய்வு. தவற விட்டால் பைத்தியம் பிடித்ததாய்த் தோன்றும். மீதி நான்கு மணி நேரமாவது எனக்கே எனக்கானதா என்பது கூட உறுதியாகச் சொல்ல முடிவதில்லை. அந்த நான்கு மணி நேரத்தையும் அடுத்தவருக்காகச் செலவழிக்க இயலுமா? செய்யத்தான் வேண்டுமா? நிறையக் குழம்புகிறேன் ராதா..."

— மனம் முழுக்க அதே குழப்பமே சுற்றிச் சுற்றி வருகையில் அவன் வார்த்தைகளை வெறுமே செவி மடுக்கத்தான் முடிகிறது. ஆனாலும் இருவருக்குமே பூனையாய்க் கண்ணை மூடிக் கொண்டு போவதும் முழுவதும் கிட்டி வராத 'ஸித்தி' யாகவே இருக்கிறது. அப்படித்தான் இந்தப் பெண் இவன் மனத்தில் அலைபாய்ந்து இவன் அதில் எனக்கும் பங்கு தந்தான்.

"அரைகுறை ஆடையோட அந்தப் பெண் அந்த நெரிசலான தெருவிலே போய் வரறப்போ பார்க்க ரொம்பக் கஷ்டமாயிருக்கு ராதா. காஷுவலா கேட்கிற மாதிரி அக்கம் பக்கத்துல கேட்டும் ஒண்ணும் விவரம் கிடைக்கலே. ரொம்பத் துருவிக் கேட்டா, ஆம்பிளைங்கறதுனால தப்பா எடுத்துப்பாங்களோன்னு பயமாயிருக்கு. அதான் உன்னைக் கூப்பிடறேன். ஏதாவது பழைய ஸாரி, பிளவுஸ் இருந்தால் கொண்டு வாயேன். அவளுக்கு ரெண்டு பேருமாக் கொண்டு போய்க் கொடுத்து, அப்படியே அவள்கிட்ட பேசிப் பார்த்து மெதுவா அவளை ஏதாவது 'ரீஹாபிலிடேஷன் ஹோம்' (rehabilitation home) ல சேர்த்து விடுவோம். இப்படி இருக்கிறது இவளுக்குப் பாதுகாப்பு இல்லை. பைத்தியம்னு வேறே சொல்றாங்க..."

பழம் புடைவை, சட்டை இரண்டு ஜதை ஒப்பேற்றி இன்று இருவருமாய் வந்தாகி விட்டது. அலுவலகத்தில் ஒரு மணி நேர பர்மிஷன்.

ஒரு பார்வைக்குக் 'கிரேக்கச் சிற்பம்' போல இருந்தாள். இருபுறமுமாய்ப் பெருகியோடிய குழலும், கூர் நாசியும், பசிமயக்கத்திலும் ஒளி குன்றிவிடாத தீர்க்கமான கண்களும், தேக்கு மாநிறத்தில் திண்ணென நின்ற காலும், கையும் அவள் அரை நிர்வாணத்தையும் ஒரு கலைத்திறமாய்க் காட்டியது. எப்பொழுதும் போல் அவளைச் சுத்தமாக்கி, தலைசீவி, புத்துடை அணிவித்துப் பார்த்தேன். அழகாக இருந்தாள். சுள்ளென்று ஒரு வலிக்கிறல் உள்ளே விழுந்தது.

ஆளைப் பார்த்து விட்டோமே தவிர அருகே போகப் பயமாக இருந்தது. பைத்தியம் என்பதால் அடித்து, கடித்து விட்டால்... அத்தனை பேருக்கும் நேரே அவமானமாகப் போய்விடும். நாங்கள் அவளைப் பார்த்துப் பேசிக் கொள்வது தெரிந்தோ என்னவோ, அவளும் எங்களையே தீர்க்கமாகப் பார்த்திருந்தாள். சுற்றிலும் பல வயதிலுமாய் ஆட்கள் அவளைக்கடந்து அப்பால் சென்று விடுவதிலேயே குறியாக, அவசர அவசரமாக அப்பால் போனார்கள். சற்றே அவள் புறம் பார்வையைத் திருப்பிய ஓரிருவரைப் பார்த்து, உரத்த குரலில் — கேட்க முடியாத கெட்ட வார்த்தைகளில் வசை பாட ஆரம்பித்தாள் அவள்.

எங்களுக்குச் சப்தநாடியும் ஒடுங்கியது. இருந்தாலும் இதற்கென்று இத்தனை தூரம் வந்துவிட்டு, இம்மி கூட எதையும் நகர்த்தாமல் செல்வதா?" அதற்குத்தான் உன்னையும் அழைத்து வந்தேன்," என்ற விஸ்வத்தை எரிச்சலுடன் பார்த்தேன். 'பாம்பின் கால் பாம்பறியும்' என்பதெல்லாம் எத்தனை பிதற்றல். ஒவ்வொரு மனிதனும் ஒரு தனித் தீவு. 'அவன் மனம், அவன் அனுபவங்கள் — இதில் அடுத்தவருக்கு என்ன பங்கு?' என்பதாயெல்லாம் மனம் ஓடியது.

''சரி வா. காஷுவலா அந்தக் கடையில் ஏதாவது விலை கேட்கிற மாதிரி விசாரிப்போம். எப்படியும் இந்தத் துணி களை எடுத்துக்கிட்டு ஆபீஸ் போக முடியாது. கிறல் விழுந்த ரிகார்டாய் ஒவ்வொருத்தருக்கா விளக்கம் சொல்லி உயிரே போயிடும்.''

— அவள் சற்றுத் தள்ளி யாரையோ வசை பாடியபடி நின்று கொண்டிருந்தது சௌகரியமாய்ப் போயிற்று. மெதுவாகக் கடைக்காரரிடம் பேச்சுக் கொடுத்தோம். ''பத்திரிகைக் காரங்களார் நாங்க. இவங்க நிலைமையைப் பத்தி எழுதி ஏதாச்சும் உதவி பண்ணலாம்னு...

உதட்டைப் பிதுக்கினார் கடைக்காரர். ''எல்லாம் செய்து பார்த்தாச்சுங்க. ஒண்ணும் பலனில்லை. எங்கே விட்டாலும் ஓடி வந்துடுதுங்க.''

''உறவு, ஜனம் யாருமில்லையா அவங்களுக்கு?''

''இப்ப இல்லை. பத்துப் பதினைஞ்சு வருஷங்களுக்கு முந்தி வழுவழுப்பா, தளதளன்னு, சின்னப் பெண்ணா, சீரும் சிறப்புமாத்தான் கிராமத்திலேர்ந்து வந்து இந்த ஊர்ல வாழ்க்கைப்பட்டாள். திடும்னு ஒரு நாள் புருஷன் லாரிகீழே போயிட்டான். அன்னியிலேர்ந்து மாமனார், மச்சினன் இதைப் பாடாப் படுத்தினாங்க. மாமியார் வாயில்லாப்பூச்சி... மழை ராவுல ஒருநாள் வெளியே இழுத்துப் போட்டாங்க இத்த...''

கடைக்காரர் வாய் பார்க்க ஒரு சிறு கூட்டம் சேர்ந்திருந்தது. அவள் மெதுவாகக் கூட்டத்திற்கருகாமையில் நடந்து வந்தாள்.





''நம்ம கட்சித் தேர்தல் அலுவலகத் துக்குப் பக்கத்தில் புதிதா இன்னொரு அலுவலகம் திறந்திருக்கிறாங்களே ...! எதுக்கு?''

''தோற்றுப் போன நம்ம கட்சி வேட்பாளர்களுக்குத் 'தேறுதல் அலுவலகம்'!''

— கேசவன்.

கடைக்காரர் பேச்சை நிறுத்தினார். புளி கேட்ட கிழவி அவனை நோக்கி, ''தே ராக்காயி, உனக்குச் சீலை கொண்டாந்திருக்காங்க, கட்டிக்கிறியா?'' என்று கேட்டாள்.

''அது கட்டிக்கும். நல்ல பிள்ளையில்லே!'' — வாடகை சைக்கிள் முதலாளி குழந்தையிடம் பேசுவது போல் கூறினார்.

''ஏன்? நீ அவுக்கிறதுக்கா?'' — சலனமற்ற குரலில் அவளிடமிருந்து எழுந்தது கேள்வி. ஒரு சாட்டை வீச்சாய்ச் சுற்றிலும் இறங்கியது.

''தே, அதுங்கிட்டே ஏன் பேச்சுக் கொடுக்கிறே? நீ கையைப் பிடிச்சு இழுத்தேன்னு புரளி பேசும். உள்ளே வா.'' — வாடகை சைக்கிள் முதலாளியின் பெண்ஜாதி அவரைக் கடைக்குள் நெட்டித் தள்ளினாள்.

''நீங்க போயிடுங்க. ஒண்ணும் பிரயோசனமில்லே. இப்படியேதான் எடக்காக் கேள்வி கேட்டுக்கிட்டிருக்கும். மிஞ்சிப் போனால் கல்லடிக்கும். சேலையைக் கிழிச்சுக்க ஆரம்பிக்கும். ஏற்கெனவே அது அறுந்து நார் நாராத் தொங்குது.'' — மளிகைக் கடைக்காரர் மெதுவாகக் கிசுகிசுத்தார்.

''ஆனா, இவங்களோட இந்த நிலைமைக்குக் காரணம் இருக்கணுமே...! ஏன் இப்படி ஆனாங்க?''

''நாம என்ன டாக்டராம்மா அதைச் சொல்ல...? என்ன போதாத வேளையோ, கண்றாவியோ...?''

நான் மெதுவாக முன்னேறி, அந்தப் பெண்ணின் கைப்பற்றினேன். 'உள்ளங்கை வெதுவெதுப்பில் பேரன்பின் பெருநாதம் சுரந்தது' — என்ற கௌதம சித்தார்த்தனின் வரி உள்ளோடியது. சுரக்க வழியுண்டோ... சுரந்தாலும் இவள் அறிய வழியுண்டோ...?

அம்மா — உங்களுக்குத்தான் கொண்டு வந்தோம். உங்க அக்கா, தங்கை மாதிரி என்னை, இவரை நினைச்சுக்கிட்டு இதை வாங்கிக்குங்க.''

வெடுக்கென்று பிடுங்கிக் கொண்டாள். ''கந்தலைக் கொடுத்துக் காணியைக் களவாடவா, கங்காணி, என் அண்ணாச்சி'' — உரத்த குரலில் உக்கிரமாகப் பாடவும் வெலவெலத்துப் போனோம்.

சில கணங்களில் மௌனமாகி, சொல்லத் தெரியாத ஓர் உணர்வு கண்களில் கவிய எங்களைப் பார்த்தபடி நின்றாள். பின், துணியைப் பந்தாகச் சுருட்டிக் கையில் உயரப் பிடித்த வண்ணம் தெருக்கோடி புளியமரத்தின்கீழ் போய், துணியைத் தலையணையாக்கி, கால்கைகளை நீட்டி, பார்க்கக் கூசும்படி படுத்தாள். அழுகையும், கேவலுமாய், வார்த்தைகள் தெளிவாகாத ஆங்காரத்தில் யார் யாரையோ, வசைபாட ஆரம்பித்தாள். பின்னர் எழுந்து உட்கார்ந்து சரசரவென்று சுற்றுப்புறத்திலிருந்த சிறிய, பெரிய கற்களைச் சேகரிக்க ஆரம்பித்தாள். கூட்டம் சடுதியில் காணாமல் போக ஆரம்பித்தது.

ஓட்டை விட்டு வெளியே 'போ'ன்னியே — வாழ்ந்திடுவியா நீ... ஊரை விட்டு ஓட ஓடத் தொறத்தினியே உருப்படுவீங்களா பாவீங்களா...? ஊர்மேயச் சொன்னீங்களே... ஆளாளுக்கு நாயாக் கொதறினீங்களே...! பாருங்கடா...! நல்லாப் பாருங்க... நான் பெத்த பத்தினிங்களே... பூட்டி வையுங்க புருஷனுங்களை...'' — தொடர்ந்து வந்த வண்ணமிருந்தன வசவும், கண்ணீர் வற்றிய அழுகையும்.

''பூட்ட கேஸும்மா அது. நீங்க உங்க வேலையைப் பார்த்துக்கிட்டுப் போய்க்கினே இருங்க. அது விதி அப்பிடி.'' — யாரோ அங்கலாய்த்தபடி அப்பால் சென்றார்கள்.

அடுத்து என்ன செய்வது என்று புரியாமல் அகல ஆரம்பித்தோம்.

விஸ்வத்தின் முகம் விழுந்து விட்டிருந்தது. சூள் கொட்டினான். ''பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலிருந்தும் வந்து விட்டாளாமே!''

''அவள் பைத்தியமில்லை விஸ்வம்.''

''வாட்?''

''எனக்கு அப்படித்தான் படுகிறது. ஹாம்லெட் படித்திருக்கிறாய்தானே? எ மெதட் இன் மாட்னஸ்! (A method in madness).''

புரிந்ததாய் இன்னும் வலிசூழ நடந்தான். மனத்திற்குள் அவள் கடந்த காலம் படிப்படியாய்க் கண்டதுபோல் இருந்தது. மருண்ட விழிகளோடு பதினாறு வயது திருமணப் பெண்ணாய்... பின், கட்டுக் குலையாத உடம்புடைய கைம்பெண்ணாய்... இளமையும், வறுமையுமாய்க் கந்தலால் போர்த்தப் பிரயத்தனப்பட்டபடி... சுற்றிலும் வெறி நாய்கள் கோரப் பற்களும், நாத்தொங்கலுமாய்... பட்டுப் பட்டுப் பட்டு... அகமும், புறமுமாய்ப் பழிவாங்கப் புறப்பட்டு இன்றைய போர்க்கோலம்... இந்த அரை நிர்வாணம் அவள் போர்க்கள உடை. வசவும் கெட்ட வார்த்தைகளும் பறை!

இப்பொழுதுதான் அவள் அரசியாகவாழ்கிறாள் என்று பட்டது.

அரக்கர் பயமற்ற தேவதை...

திரும்பிப் பார்த்தோம். வெகுதூரம் போய்க் கொண்டிருக்கும் புளியமரத்தடியில் அவள் நின்றிருந்த விதம் ஒரு கிரேக்கச் சிற்பமாய் ஒளிர்ந்து கொண்டிருந்தது.



* நிர்வாகக் கட்டிடம்



* துணை வேந்தர்

# புதுமைகள் படைக்கும் புதுவைப் பல்கலைக் கழகம்

புதுவைப் பல்கலைக் கழகம்.

இதை மத்திய பல்கலைக் கழகம் என்கிறார்களே? அப்படியானால் வேறு எங்கெல்லாம் இப்படிப்பட்ட பல்கலைக் கழகம் இருக்கிறது என்று மனசுக்குள் ஒரு சின்ன 'க்விஸ்' கேள்வி எழுந்தது. பட்டியல் போட்டதில், இது ஏழாவது. (முதல் ஆறு: ஜவகர்லால் நேரு யூனிவர்சிடி, தில்லி யூனிவர்சிடி, ஹைதராபாத் யூனிவர்சிடி, விசுவபாரதி யூனிவர்சிடி, வடகிழக்கு ஹில் யூனிவர்சிடி, அலிகார் முஸ்லிம் யூனிவர்சிடி.)

கடற்கரையை ஒட்டி, பிள்ளைச் சாவடி, சின்னக் காலாப்பட்டு, பெரிய காலாப்பட்டு, என்கிற மூன்று கிராமங்களை வளைத்துப் போட்டு, சுமார் 780 ஏக்கர்களில் உருவாகியிருக்கும் இந்தப் புத்தம் புதிய பல்கலைக் கழகத்தின் கட்டிடங்களிலேயே புதுமை தென்படும். பிரெஞ்சு கட்டிடக் கலையும், இந்தியக் கட்டிடக் கலையும் இதில் இணைந்திருக்கின்றன. நிலங்களை எடுத்துக் கொண்டதால் பாதிக்கப்பட்ட 1200 படித்த இளைஞர்களுக்கு, வேலைக்கு உறுதி கொடுக்கப்பட்டிருக்கிறதாம். நிர்வாகக் கட்டிடத்தின் கதவு மட்டும் லட்சத்துப் பத்தாயிரம் ரூபாய்! 'பூம்புகார்' தான் உருவாக்கிக் கொடுத்திருக்கிறது. கதவின் பித்தளைக் குமிழ்களைக் கூடிய மட்டும் துவக்க நாளன்றே கிளப்பப் பார்த்திருக்கிறார்கள் சில தைரியசாலிகள்! மிஞ்சியவை மட்டும் பளபளத்துக் கொண்டிருக்கின்றன!

தில்லியில் மட்டும்தான் ஸ்கூல் அஃப் இன்டர்நேஷனல் ஸ்டடீஸ் இருக்கிறது என்று பெருமை அடித்துக் கொள்ள முடியாது: இங்கேயும் இருக்கிறது. ஸ்கூல் அஃப் டிராமா தில்லியில் மட்டும்தான் என்று காலரைத் தூக்கி விட்டுக் கொள்ள முடியாது: சங்கரதாஸ் சுவாமிகள் ஸ்கூல் அஃப் டிராமா இங்கேயும் உண்டு. சலீம் அலி ஸ்கூல் அஃப் ஈகாலஜி இங்குதான் இருக்கிறது...

இத்தனை விரைவில் இதற்கு நிதி வசதி பெற்றது மட்டுமல்ல, துறைகள் பலவற்றை உருவாக்கி, தேவையான நபர்களைப் பொறுக்கி எடுத்து அமர்த்தியது ஒரு சாதனைதான். ''வேறு எந்தத் துணை வேந்தர் இந்தப் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருந்தாலும் இத்தனை சீக்கிரம், இந்த அளவுக்கு வேலைகள் நடந்திருக்காது!'' என்று அடித்துச் சொல்கிறார் ஓர் அதிகாரி!

ஒவ்வொரு வருடமும், மாணவர் பரிவர்த்தனைத் திட்டம் உண்டு. பாண்டிச்சேரிக்குப் பிரெஞ்சுத் தொடர்பு இருப்ப

* நவீன அரங்கம்



தால், போன வருடம் பன்னிரண்டு பேர் பிரான்சுக்குப் போனால், இந்த வருடம் அங்கேயிருந்து அவர்கள் வருவார்கள். பொருளாதாரத் துறை, அறிவியல் துறை எல்லாவற்றிலும் இந்தத் திட்டம் செயல்படுகிறது.

மக்கள் தொகை ஆராய்ச்சிக்காக, நியூயார்க் பாபுலேஷன் ஆராய்ச்சி கவுன்சில் பத்தாயிரம் டாலர் கொடுத்திருக்கிறது. ஜப்பான், புத்தகங்கள் வாங்க ஒரு லட்ச ரூபாய் கொடுத்திருக்கிறது. மின்காந்த இயல் ஆராய்ச்சித் துறைக்காக, பல பல்கலைக் கழகங்களைப் பார்த்த பிறகு, இதைத் தேர்ந்தெடுத்தார்களாம்.

- தமிழ் பி.ஏ.யில் அச்சுக் கலை; பத்திரிகைக் கலை;
- ஆங்கிலத்தில், பிற இலக்கியங்களில் ஒப்பு நோக்கும் கம்பாரடிவ் லிடரேச்சர்;
- கணிதத்தில் தியரி மட்டுமல்ல. செயல்முறைக்கான ஃபங்ஷனல் மாதமாடிக்ஸ்;
- எதிர்கால இயல்;
- பிரெஞ்சு டிசைன் கலை;
- பி. எஸ். ஸி. பிஸிகல் எஜுகேஷனில் ஸ்போர்ட்ஸ் மெடிசின், ஃபிஸியோ தெரபி!

துணைவேந்தர், டாக்டர் வேங்கட சுப்பிரமணியம் சொன்னார்: "இந்தியாவில் உள்ள பல்கலைக் கழகங்களில் எல்லாவற்றையுமே துணைவேந்தர்தான் கவனிக்க வேண்டிய நிலை இருக்கிறது. ஆனால் இங்கு ஒரே நபரிடமிருந்து கட்டளைகள் பெறும் இந்த முறை மாற்றி அமைக்கப்பட்டிருக்கிறது. பல்வேறு துறைகளுக்கு வேண்டிய அதிகாரங்கள் பகிர்ந்தளிக்கப்பட்டிருக்கின்றன.

"ஒரு கோடி ரூபாய்க்கு மேல் நூலகப் புத்தகங்களுக்கு மட்டுமே கொடுக்கப்பட்டிருக்கிறது. நூலகம் ஆனந்தரங்கம் பிள்ளை அவர்கள் பெயரால் அமைக்கப்பட்டிருக்கிறது.

"சமஸ்கிருதத் துறையில் லெக்சரர் டாக்டர் பி. கே. தலாய். இவர் ஒரு ஹரிஜன். டாக்டர் அம்பேத்காரின் உறவினர். நேஷனல் போர்ட் ஆஃப் ஹையர் மாதமாடிக்ஸில் அகில இந்திய 'ராங்க்' வாங்கியிருக்கிற மாணவி மங்கையர்க்கரசி இந்தப் பல்கலைக் கழகம்தான்.

"இந்த நிலத்தில் எதுவும் விளையாது என்றார்கள். ஒரு லட்சம் மரங்கள் வளர்க்கத் திட்டம். 33,000 நட்டிருக்கிறோம். ரோஜா தோட்டத்தில் மட்டும் தினசரி மூவாயிரம் ரூபாய் வருமானத்துக்கு வழி இருக்கிறது. (புதுவைப் பல்கலைக் கழகத்துக்கு விஜயம் செய்கிறவர்கள், மறக்காமல் பார்க்க வேண்டியது நர்சரி!) மீன் பண்ணையில் தங்க மீன்கள் வளர்த்து அனுப்பத் திட்டம் இருக்கிறது. மூன்றே ஆண்டுகளில் அகில இந்தியக் கவனத்தைக் கவர்ந்திருக்கிறது இந்தப் பல்கலைக் கழகம்."

வருங்காலத் திட்டங்களும் ஏராளமாக வைத்திருக்கிறார் துணைவேந்தர்.

டில்லி பல்கலைக் கழகத்திலிருந்து வந்து, நாடகத் துறையின் தலைவராகப் பொறுப்பேற்றிருக்கிறார் இந்திரா பார்த்தசாரதி.

"உங்கள் சிலபஸ் எப்படி?"

மூன்று தியரி பேப்பர்களில் நாடக இலக்கணம், ஈஸ்தடிக்ஸ், பரம்பரை தியேட்டர், இந்திய மற்றும் உலக நாடக வரலாறு. பிராக்டிகல்ஸில் ஸீன் டிசைன், தியேட்டர் ஆர்க்கிடெக்சர், மேக்அப், காஸ்ட்யூம்ஸ், லைட்டிங் எல்லாம் உண்டு."

காலை எட்டு மணிக்கே வகுப்புகள் ஆரம்பமாகின்றன. வாய்ஸ் கல்ச்சர், ப்ளே-ரீடிங், இசைப் பயிற்சி என்று தொடர்கின்றன.

சமீபத்தில், எழுத்தாளர் கி. ராஜநாராயணனும் இங்கே பேராசிரியராகச் சேர்ந்திருக்கிறார்.

எம்.பி.ஏ. எனப்படும் நிர்வாக இயல் படிப்புக்கு எக்கச்சக்க டிமாண்ட். முப்பது பேருக்குத்தான் இடம் இருக்கிறது! 3000, 4000 சம்பளத்தில் கொத்திக் கொண்டு போய் விடுகிறார்கள் தொழிலதிபர்கள்!

"பல்கலைக் கழகம் என்பது மக்களின் அறிவியல் ஆர்வத்தை உணர்ந்து அதற்கு வாய்ப்புக் கொடுத்தால் மட்டும் போதாது; பயத்தைப் போக்கி, எதிர்காலத்தைத் துணிச்சலோடு எதிர்கொள்ளும் மனத் துணிவையும் உண்டாக்க வேண்டும்... படிப்பு வேறு; அறிவு என்பது வேறு. இதை மக்களுக்கு உணர்த்தி விட்டால், நாட்டுக்கு நிச்சயம் பிரகாசமான எதிர்காலம்தான்!" என்கிறார் டாக்டர். இ. வேங்கடசுப்பிரமணியன்.

— சாருகேசி

புகைப்படங்கள்: யோகா

---

## தாய்ப்பால் வங்கி!

கண் வங்கி, ரத்த வங்கி முதலியவற்றைத் தொடர்ந்து இப்போது தாய்ப்பால் வங்கி பம்பாயில் ஆரம்பிக்கப்பட்டுள்ளது! இதற்கான செலவை தாஜ் குரூப் ஹோட்டல் ஏற்றுக் கொண்டுள்ளது. ஆறு, ஏழு மாதங்களில் பிறக்கும் குழந்தைகள், மிகக் குறைந்த எடையில் பிறக்கும் குழந்தைகள் ஆகியன உயிர் பிழைக்க இந்தத் தாய்ப்பால் மிக உபயோகமாக இருக்கும். ஏனெனில் தாய்ப்பாலுக்குத்தான் கிருமி எதிர்ப்பு சக்தி மிக அதிகம். பாலைக் கெடாமல் ஆறு மாதம் வரை பாதுகாக்க வசதியுள்ளது.

நன்றி: 'டைம்ஸ் ஆப் இந்தியா.'

— செம்பூர் சந்துரு.

அடுத்த நூற்றாண்டு:

**18**

* பிரபலமாகிக் கொண்டிருக்கும் ஒர்க் ஸ்டேஷன் (Work Station)கள்.



# 'ஜம்ப' கம்ப்யூட்டர்கள்!

சுஜாதா

முதலில் சென்ற வாரக் குவிஸ்ஸுக்கு விடை சொல்லி விடுகிறேன். அந்தப் பத்து வார்த்தைகள்:

ஜிப்ராம்
ராம்
மோடம்
அனலாக்
டிஜிட்டல்
கம்ப்யூட்டர்
ஃப்ளாப்பி
வின்செஸ்டர்
விடியோ
டிஸ்க்

சரியான விடைகள் எழுதியவர் விவரம் அடுத்த வாரம்.

கடந்த நாற்பது வருடங்களில் கம்ப்யூட்டர் அளவில் சின்னதாகிக் கொண்டே வந்திருக்கிறது. அதே சமயம் ஆற்றலில் பெரிதாகிக் கொண்டே வந்திருக்கிறது. நாற்பதுகளில் ஓர் அறை முழுவதும் பரவியிருந்தது. இன்றைக்கு ஒரு நகக்கண் அளவுக்கு வந்து விட்டது. இப்படியே போனால் அடுத்த நூற்றாண்டில் என்ன ஆகும்?

'மாலிக்யூல்' என்று கேட்டிருப்பீர்கள் — கூட்டணு என்று சொல்லலாமா? மிக மிகச் சிறிய அணுக்கூட்டு. ஒரு தனிமத்தின் அல்லது ரசாயனப் பொருளின் ஆதார அடையாளம் மாலிக்யூல். இந்த மாலிக்யூல் அளவுக்குக் கம்ப்யூட்டர் பண்ண முடியுமா என்று அமெரிக்காவில் யோசித்து, சில பரிசோதனைகளும் பண்ணிக் கொண்டிருக்கிறார்கள்! இவ்வகை 'மாலிக்யூலர் கம்ப்யூட்டர்கள்' இன்றைய கம்ப்யூட்டர்களை விட ஒரு லட்சம் மடங்கு அதிக வேகமுள்ளவையாக இருக்கும் என்று எதிர்பார்க்கிறார்கள்!

## வேண்டுமென்றே செய்த தவறு!

கல்கி 26.11.89 இதழில் சுஜாதா தமது கட்டுரையில் தெரிந்தே செய்த தப்பு என்ன என்பதைக் கண்டுபிடித்துப் பலர் எழுதியிருந்த போதிலும், முதலில் நமது பார்வையில் பட்ட சரியான விடையை (1024 பைட் = ஒரு கிலோ பைட்) எழுதியவர்:

**எஸ். சுதாகர், 7, எட்டாவது தெரு, பார்த்தசாரதி நகர், ஆதம்பாக்கம், சென்னை — 88**

இவருக்கு சுஜாதா எழுதிய புத்தகம் ஒன்று பரிசாக அனுப்பி வைக்கப்படுகிறது.

**— ஆசிரியர்**

இந்தச் சிறுமை என்பதே ஒருவித சக்தி. கம்ப்யூட்டர்கள் சின்னதாகச் சின்னதாக, அவற்றை இப்போது எட்ட முடியாத இடங்களில் வைக்க முடியும். உதாரணத்துக்கு, மாலிக்யூலர் கம்ப்யூட்டர் என்பது மனித செல்களை விடச் சின்னதாக இருக்கும். ஏன்! நம் ந்யூரான்களை விடச் சின்னதாக இருக்க முடியும்... எனவே, நம் செல்களுக்குள்ளும் கம்ப்யூட்டர்களை விதைத்திட முடியும். மனித மூளையை விட அடர்த்தியாக அவற்றை இணைக்க முடியும்.

இதன் எதிர்காலச் சாத்தியக் கூறுகள் பயங்கரமான வசீகரம் கொண்டவை.

இந்த ஐடியாவை முதலில் கொடுத்தவர் ரிச்சர்டு ஃபேய்மன் என்னும் நோபல் இயற்பியல் விஞ்ஞானி. 1959 — இல் ஒரு சொற்பொழிவில் அவர் அணுவுக்குள் நிறைய இடம் இருக்கிறது. அணு அணுவாக நம்மால் வடிவமைக்க இயலும். அதற்கான சாதனங்கள் இன்னும் வரவில்லை என்றார்.

அது அப்போது...

இப்போது அதற்கான சாதனங்கள் வரத் துவங்கி விட்டன. அணு அணுவாக, அல்லது மாலிக்யூல் மாலிக்யூலாக நம்மால் வடிவமைக்க இப்போது முடிகிறது. இதன் மூலம் கம்ப்யூட்டர்களை அமைத்தால் மிக மிகச் சிறிதாகவே இருக்கும்.

ஒரு மில்லி மீட்டர் என்பது ஒரு மீட்டரில் ஆயிரத்தில் ஒரு பாகம். ஒரு மைக்ரான் என்பது பத்து லட்சத்தில் ஒரு பாகம். இன்றைய சில்லுகளுக்கு உள்ளே பார்த்தால், அவற்றின் இணைப்புக்களின் அருகாமை மைக்ரான் கணக்கில் இருக்கும். ஒரு மைக்ரான் அல்லது ஸப்மைக்ரான் என்று அரைக்கால் மைக்ரான் அளவில் நுட்பத்தின் எல்லை வந்து விடுகிறது. அதற்கப்புறம் நாம் 'நானோ மீட்டர்'களில் பேச வேண்டும். ஒரு நானோ மீட்டர் என்பது ஒரு மீட்டரில் நூறு கோடி பாகம். இப்போது மாலிக்யூல் அளவுகளுக்கு அருகே வந்து விட்டோம்.

கால அளவில் ஒரு மைக்ரோ செகண்டு என்பது ஒரு செகண்டில் பத்து லட்சத்தில் ஒரு பாகம். நானோ செகண்டு என்பது நூறு கோடி பாகம். கல்கி இதழின் இந்தப் பக்கத்தின் நீளத்தை ஒளி ஒரு நானோ செகண்டில் கடந்து விடும். இதில் ஆயிரத்தில் ஒரு பாகம் ஒரு ஃபெம்டோ செகண்டு.

இன்றைய சிலிக்கன் சில்லுக்களில் ஒரு சதுர மில்லி மீட்டருக்கு ஐம்பதாயிரம் ட்ரான்ஸிஸ்டர்களை அடைக்க இயலும். இடைவெளி ஒரு மைக்ரான் இரண்டு மைக்ரான் இருக்கும். அதை விடக் கீழாக, நானோ மீட்டர் கணக்கில் நுட்பமாகப் போனால், எலக்ட்ரான்களின் ஆதார மின் குணங்கள் சில மாறிப் போய், க்வாண்டம் இயற்பியல் குணங்கள் முன்வந்து விடுகின்றன.

மாலிக்யூல் அமைப்பை ஆதரித்து, அவற்றை லேசர் ஒளி மூலம் கட்டுப்படுத்தி, கம்ப்யூட்டருக்கு ஆதாரமான கேட் — கதவு அமைப்பைச் செய்வதில் வெற்றி கண்டிருக்கிறார்கள். இதை மாலிக்யூலர் எலக்ட்ரானிக் டிவைஸ் எம்.இ.டி. என்கிறார்கள். கம்பி இணைப்புகளுக்குப் பதிலாக லேசர் ஒளியை ஊடு பிரித்து, இந்த மாலிக்யூலர் கட்டட அமைப்பில் அலைய விட்டு, கம்ப்யூட்டர் சித்தாந்தங்களை வேறு வழியில் அமைக்கிறார்கள். இப்படிச் செய்தால் சுமார் ஒரு லட்சம் கேட்டுகள் ஒரு மைக்ரான் அளவில் அடக்கி விட முடியும். இது பிறப்பதற்கு முன் பேர் வைத்து விட்டார்கள்: மைக்ரோ கம்ப்யூட்டருக்குப் பதில் 'நானோ கம்ப்யூட்டர்'. தமிழில் 'எறும்பு கம்ப்யூட்டர்' எனச்



**பரிசு ரூ. 500!**

● வைஜயந்திமாலா இந்தத் தொகுதிக்கு என்ன சாதித்தார்...? நிரூபிப்பவருக்கு ரூ. 500 பரிசு! — தென் சென்னைத் தொகுதி 'பஸ்' ஒன்றில் கண்ட போஸ்டர் இது. தி. மு. க. வெளியிட்டது!

நிரூபிக்க அவசியமில்லாமல், வைஜயந்திமாலாவே அடித்து விட்டாரே பரிசு!

— எஸ். ஆர்.

கிடந்த ஞாயிறன்று நண்பர் வீட்டுக்குப் போன போது அவர் வீட்டுக் குழந்தைகள் இரண்டு பிரிவுகளாக எதிர் எதிர் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு வைத்த கண் வாங்காமல் டி.வி.யில் மகாபாரதம் பார்த்தபடி இருந்தனர். அவ்வப்போது ஒரு குழுவிடமிருந்து 'பன்னிரண்டு', 'பதின் மூன்று' என்று கூக்குரல் எழும். இன்னொரு குழு 'பதினேழு', 'பதினெட்டு' என்று கூவும். எதற்காக இந்த 'பாயின்ட்' கணக்கு என்று ஒரு வாண்டை விசாரிக்க முயன்றேன். 'ஷ்ஷ்' என்று உக்கிரமாக என்னை அதட்டி அடக்கி விட்டது! நிகழ்ச்சி முடிந்ததும் நிதானமாகக் கேட்ட போதுதான் விளக்கினாள் ஒரு சிறுமி:

ஒரு குழு 'பார்த்து' என்கிற வார்த்தை நிகழ்ச்சியில் எத்தனை முறை இடம்பெறுகிறது என்றும், மற்றொரு குழு 'பெந்து' என்ற சொல் எவ்வளவு முறை வருகிறது என்றும் எண்ண வேண்டுமாம். எந்த வார்த்தை அதிகமாக இடம்பெறுகிறதோ அதை எண்ணும் குழுவுக்குப் பரிசு: சாக்லேட்டுகள்!

இதில் ஒரு வேடிக்கை: 'பார்த்து', 'பெந்து' என்ற இரண்டு ஹிந்தி வார்த்தைகளுக்கும் ஒரே அர்த்தம்தான்!

நன்றி: டைம்ஸ் ஆப் இந்தியா.



சொல்லலாமா? அமெரிக்காவில் டெக்ஸஸ் இன்ஸ்ட்ருமேண்ட்ஸ், கார்னிஜி மெல்லான், ஸ்டான்ஃபோர்டு போன்ற இடங்களில் ஆராய்ச்சி சாலைகளில் உருவாகிக் கொண்டிருக்கின்றன. இன்னும் கோதாவுக்கு வரவில்லை. ஆனால் இவை வெற்றி பெற்றால், கம்ப்யூட்டர் இயல், சிருஷ்டிக்கு மிக அருகே வந்து விடும். எரிக் டெக்ஸ்லர், ஸ்டான்ஃபோர்டு பேராசிரியர், நம் செல்களின் உள்ளே கம்ப்யூட்டர்களை மிதக்க விட்டு அங்கே வெட்டி ஒட்டி எதிர்காலத்தில் ரிப்பேர் செய்யலாம் என்று சொல்கிறார். கான்ஸரா, கான்ஸர் செல்களின் ஆதார இயற்கையை மாற்ற ஒரு 'எறும்பு கம்ப்யூட்ட'ரை, அதன் பொல்லாத்தனத்தையெல்லாம் நீக்கி விட்டு வருமாறு ஆணை கொடுத்து அனுப்பி விடலாம்! அதே போல் ந்யூரான் ந்யூரான்களாக மூளையை மாடல் அமைக்கலாம். இப்படி மாடல் அமைத்தால் உங்கள் மூளையில் உள்ள அத்தனை ஞாபகங்களையும் இந்த மாடலுக்கு மாற்றி விட்டு ஒருவாறு நீங்கள் சாஸ்வதம் பெறலாம்!

டெக்ஸ்லர் சில சமயம் ரொம்ப ரீல் விடுகிறார் என்று தோன்றினாலும் இந்த நூற்றாண்டின் இறுதி ஆராய்ச்சிகளைச் சற்றே நம்பிக்கையுடன் விரிவுபடுத்தி, அடுத்த நூற்றாண்டுக்குக் கொண்டு போனால், இன்னும் பத்துப் பதினைந்து வருஷங்களில் மாலிக்யூலர் கம்ப்யூட்டர் வந்து விட சாத்தியம் இருக்கிறது. அப்போது மூளை ரிப்பேர், செல் ரிப்பேர் சாத்தியம் இல்லாவிட்டாலும் மிகச் சிறிய மிக அதிவேக எறும்பு கம்ப்யூட்டர் வரும் சாத்தியக்கூறுகள் அதிகம்.

கனவு காண லைசென்ஸ் வேண்டாம். இந்தக் கனவுகள் யாவும் விஞ்ஞானக் கனவுகள். 1833 இல் சார்லஸ் பாபேஜ் என்பவர் ஒரு கனவு கண்டார். அனலிட்டிக்கல் என்ஜின் என்று ஒன்று அமைக்க விரும்பினார் — கைக் காசைச் செலவழித்து. அந்த யுகத்தின் வசதிகள் பற்றாக்குறையினால் அவர் கனவு நனவாக முடியவில்லை. இன்றைக்குச் சார்லஸ் பாபேஜைக் கம்ப்யூட்டர் இயலின் மூதாதை என்று சொல்கிறார்கள். அவர் எண்ணிப் பார்த்த ஆதார அமைப்பு நவீன கம்ப்யூட்டரில் இன்னமும் செல்லுபடி. பாபேஜ் ஒரு நூற்றாண்டு அவசரமாகப் பிறந்து விட்டார். அதே போல் இன்றைய நூற்றாண்டின் அவசரப் பிறவிகளில் டெக்ஸ்லரும் ஒருத்தர். ஒருவேளை நாம் சார்லஸ் பாபேஜைப் பற்றி இப்போது எழுதுவது போல் கி.பி. இரண்டாயிரத்து அறுபதில் டெக்ஸ்லரைப் பற்றி யாராவது எழுதலாம்.

மிக அதிகமாகக் கம்ப்யூட்டரைப் பற்றிச் சொல்லி விட்டோம். அடுத்த நூற்றாண்டில் விண்வெளி பயணத்தில் என்னவெல்லாம் நிகழக்கூடும் என்பதைப் பற்றி அடுத்த வாரம் சொல்லுமுன் மற்றொரு க்விஸ்: இதுவரை வந்ததைப் பற்றி ஐந்து கேள்விகள் — எல்லா விடையும் சரி என்றால் நீங்கள் நல்ல ஞாபக சக்தி உள்ளவர்.

1. ஒரு வாத்தியத்தைக் கம்ப்யூட்டர் மூலம் சங்கீதம் பண்ண வைக்கத் தேவையானது?
2. ஒரு டெலிபோன் மூலம் கம்ப்யூட்டர் செய்தி அனுப்பத் தேவையானது?
3. ஒரு டெலிபோன் கம்பியில் பேச்சு, படம் இரண்டையும் அனுப்பத் தேவையானது?
4. நவீன செய்தித் தொடர்பியலுக்கு மிக முக்கியமான முதல் படி...?
5. இதையெல்லாம் சாத்தியமாக்கும் தனிமம்?

(தொடரும்)

# பிரதோஷ காலம்–
# பிரதோஷ வரலாறு

சுக்கில பக்ஷம், கிருஷ்ண பக்ஷம் என்னும் இரண்டு பக்ஷத்திலும் வருகின்ற திரயோதசி திதியில் சூரியாஸ்தமனத்திற்கு முன் மூன்றே முக்கால் நாழிகையும், பின் மூன்றே முக்கால் நாழிகையுமாய் உள்ள காலமே பிரதோஷம் எனப்படும்.

## பிரதோஷ வரலாறு

### தசமி திதியன்று (பத்தாவது நாள்) நடந்தது:

தசமி திதி அன்று ஒருவேளை உண்டு இந்திராதி தேவர்களும் அசுரர்களும் மந்திரகிரியை மத்தாகவும், வாசுகி என்ற நாகராஜனைத் தாம்புக் கயிறாகவும் அமைத்தார்கள். அசுரர்கள் தலைப்புறமாகவும், தேவர்கள் வால்புறமாகவும் நின்று அமிர்தம் கடையலானார்கள். கடைந்தபோது வாசுகி நஞ்சை உமிழ்ந்தது. கடலில் இருந்தும் நஞ்சு தோன்றியது. வாசுகி கக்கிய ஆலமும் கடலில் தோன்றிய ஆலமும் ஒன்று சேர்ந்து ஆலாலம் எனப் பேர் பெற்றது. அக்கொடிய விடத்தை வானவர்கள் விருப்பப்படி அடியவர்களாகிய அமரர்கள் உய்ய அமுதம் போல் சிவபெருமான் உண்டருளினார்.

### ஏகாதசி திதியன்று (பதினோராவது நாள்) நடந்தது:

சிவபெருமான் சொற்படி தேவர்கள் மறுபடியும் பாற்கடலைக் கடைந்தார்கள். ஏகாதசியன்று பகல் முழுவதும் பட்டினி இருந்து இரவு முழுவதும் உறக்கமின்றி பாற்கடலைக் கடைந்தார்கள்.

### துவாதசியன்று நடந்தது (பன்னிரண்டாவது நாள்):

துவாதசியன்று அதிகாலையில் அமிர்தம் கிடைத்தது. அதைத் தேவர்கள் பகிர்ந்து உண்டார்கள். அந்த மகிழ்ச்சியில் தேவர்கள் துவாதசியன்று ஆடியும் பாடியும் பொழுதைப் போக்கினார்கள்.

### திரயோதசி அன்று நடந்தது (பதிமூன்றாம் நாள்):

தேவர்கள் சிவபெருமானை முன்னாலே வணங்காது பொழுது போக்கிய தங்கள் குற்றத்தை உணர்ந்து சிவபெருமானிடம் பணிந்து தங்கள் குற்றத்தை மன்னித்தருளுமாறு வேண்டினார்கள்.

பரம கருணாநிதியாகிய சிவபெருமான் மகிழ்ந்து தேவர்களுக்கு அருள் புரியத் திருவுளம் கொண்டு கயிலையில் அன்று மாலை (4.30 மணி முதல் 6.00 மணி வரை.) பிரதோஷ வேளையில் தவத்திரு முன் இருந்த ரிஷப தேவரின் இரு கொம்புகளுக்கிடையில் நின்று அம்பி கையைக் காணத் திருநடம் செய்தருளினார். தேவர்கள் அதனைத்

தரிசித்து சிவபெருமானை துதி செய்து வணங்கினார்கள். அது முதல் திரயோதசி திதியன்று மாலை நேரம் பிரதோஷம் ரஜனீ முக வேளை பாபத்தை போக்கும் நேரம்.

## பிரதோஷ பூஜாபலன்:

சிவ மூர்த்திக்குரிய பல வித விரதங்களில் தலையாயது. இவ் விரதத்தை அநுஷ்டிப்போர் துன்பங்களினின்றும் நீங்கி இன்பத்தை எய்துவர்.

## பிரதோஷ மகிமை:

சிவபெருமான் பிரதோஷ காலத்தில் இடப தேவரின் இரு கொம்புகளுக் கிடையே உயிர்கள் உய்யும் பொருட்டு திருநடம் புரிந்தார். அப்போது சரஸ்வதி வீணை வாசித்தாள். இந்திரன் புல்லாங்குழல் ஊதினார். பிரம்ம தேவர் தாளம் போட்டார். இலட்சுமி தேவி பாடினாள். திருமால் மிருதங்கம் வாசித்தார். தேவர்கள், முனிவர்கள், சித்தர்கள், யக்ஷர்கள், கின்னர்கள், திசை பாலர்கள் முதலிய அனைவரும் வந்து பிரதோஷ காலத்தில் இறை வனை வழிபடுகிறார்கள்.

# ஏழாவது இரவு

கதை: அபர்ணா நாயுடு

சித்திரம்: [illegible]

7

அவள் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்த மாலினி, அதில் தெரிந்த மாற்றத்தைக் கண்டதும் திடுக்கிட்டாள்.

போனை மெள்ள வைத்த ரஞ்சனா, இயந்திரமாகத் திரும்பி சோபாவை நோக்கி நடந்தாள். நெருங்கி, அமர்ந்து, சாய்ந்து கொண்டாள். பெருமூச்சு விட்டாள்.

அருகில் வந்து உட்கார்ந்த மாலினி ஆதரவாகத் தோளைத் தொட்டதும் கண்களை மூடித் திறந்தாள். சொன்னாள்.












சரிந்து ரஞ்சனாவை நெருங்கினாள். ரகசியமாகப் பேசினாள். சட்டென்று தோன்றிய அந்தத் திட்டத்தை அவள் விவரித்த போது ரஞ்சனாவின் கண்கள் விரிந்தன.

துணிச்சலான ஓர் ஏற்பாட்டைச் சொன்ன மாலினியை வியப்போடு பார்த்தாள். கூடவே இன்னோர் எண்ணமும் எழுந்தது.

'முடியுமா? இரண்டு பெண்கள் மட்டுமே தனித்து அதைச் செய்து முடிக்க இயலுமா? கொலை செய்தவன் அதிலிருந்து தப்பிக்க என்ன வேண்டுமானாலும் செய்ய மாட்டானா? அதற்காக எந்தத் தொலைவுக்கும் போக மாட்டானா?

அதை மாலினியிடம் சொன்ன போது—












ஆட்டோ ஓடிக் கொண்டிருந்தது. உள்ளே உட்கார்ந்திருந்த இருவரும் அவரவர் சிந்தனைகளில் ஆழ்ந்திருந்தார்கள்.

'டெலிபோன் வந்து பேச்சு திசை மாறியதில் இவன் சொன்ன கடிதத்தையும் போட்டோவையும் பார்க்கத் தவறிப் போச்சே!' என்று நினைத்தாள் ரஞ்சனா.

தன் திட்டத்தை மனத்துக்குள் அலசிக் கொண்டிருந்தாள் மாலினி. கல்லூரி, புத்தகங்கள், பரீட்சை என்று இதுநாள் வரையில் இயந்திரத்தனமாக இயங்கி வந்தவளை இப்போது ஒரு புதிய உற்சாகம் பற்றியிருந்தது. அதன் விளைவாக ஒரு படபடப்பை உணர்ந்தாள்.

சிக்னலுக்காக ஆட்டோ நின்றது. தொடர்ந்து அருகே படபடவென்ற ஒலியுடன் ஒரு மோட்டார் சைக்கிள் வந்து நின்றது. தற்செயலாகத் திரும்பி வெளியே பார்த்த மாலினி திடுக்கிட்டாள்.

'ஐயோ! இவன்... இவன்...'

— தொடரும்



அமேதி அரண்மனை

# அமேதி அரண்மனையில் ராஜா சாப்!

சஞ்ஜய் சிங்

ராஜீவ் காந்தி தேர்தல்களை எதிர்பாராத சமயத்தில் அறிவித்த போது சொல்லப்பட்டக் காரணங்களில் ஒன்று: "சஞ்ஜய் சிங் முதுகுத் தண்டில் ஆபரேஷன் செய்து கொண்டு முழு ஓய்வில் இருக்கிறார். அவரால் இப்போது உ.பி. முழுதும் சுற்ற முடியாது; எனவே காங்கிரஸுக்குப் பிரச்னை குறைந்து, பலம் கூடுகிறது!"

அமேதியில் தேர்தல் செய்திகள் சேகரிக்கச் சென்ற போது சஞ்ஜய் சிங்கைச் சந்தித்தோம். அமேதி அரண்மனையில் ஓய்வு எடுத்துக் கொண்டிருந்தார். ஊருக்கு ஒதுக்குப்புறமாய், கம்பீரமான அழகுடன் நின்றிருந்தது அரண்மனை. அதன் பிரம்மாண்டமான வாயிற் கதவினருகே வயது முதிர்ந்த காவலாளி. அவர் தம் கையிலிருந்த துப்பாக்கியை உபயோகித்துப் பலப் பல வருஷங்கள் ஆகியிருக்கும் போல் இருந்தது.

அரண்மனை வாசலில் நின்ற புது நீல நிற மாருதி ஜிப்ஸியும், சுவர்களில் குறுக்கும் நெடுக்குமாய் ஓடிய இண்டர்காம் ஒயர்களும்தான் தற்காலத்தின் அடையாளங்கள்.

உள்ளே நுழைந்தால் முன்னறை வாசலில் சஞ்ஜய் காந்தி படம். அவர்தான் சஞ்ஜய் சிங்கை அரசியலில் புகுத்தியவர். 'ராஜா ஸாப்' என்ற வார்த்தை அடிக்கடி அடிபட்டது. 'ராஜா ஸாப் அழைக்கிறார்' என்று பணியாட்கள் முதல் மாடியில் சஞ்ஜய் சிங் அறைக்கு அழைத்துச் சென்றார்கள். மிகக் கவனமாகச் செருப்பை வெளியில் கழற்றச் சொன்னார்கள்.

தும்பைப்பூ வெள்ளை பைஜாமா குர்தாவில் சஞ்ஜய் சிங் படுத்திருக்க, கலர் டி.வி.யும், அடிக்கடி ஒலி எழுப்பிய 'டெலி'போனும் துணையிருந்தன. சுவரில் தொங்கிய முன்னோர்கள் மற்றும் மகான்கள் படங்களில் காஞ்சி பெரியவர் படமும் இருந்தது.

"எனது முன்னோர்கள் முந்நூற்றி ஐம்பது வருடங்களுக்கு முன் கட்டிய இந்த அரண்மனையில் நாலைந்து அறைகளை மட்டுமே என்னால் இப்போது பராமரிக்க முடிகிறது" என்றார் சஞ்ஜய் சிங்.

சையத் மோடி கொலை வழக்கில் அவர் சம்பந்தப்பட்டிருப்பதாக சி.பி.ஐ. கூறியுள்ளதைப் பற்றிக் கேட்டோம்.

"அது சி. பி. ஐ.தான் — அதாவது **Congress Bureau of Investigation!**" என்று ஒரு போடு போட்டார் சஞ்ஜய் சிங்.

— **நிருபர்**

புகைப்படங்கள்: **ராஜன்**

**எதிர்ப்பக்கத்தில் —**

**பூங்குழலியும் சேந்தன் அமுதனும். பொன்னியின் செல்வன் கதையில் இனி இடம் பெறப் போகும் சுவாரஸ்யமான கட்டங்கள் பலவற்றுள் ஒன்று. மணியம் வரைந்த வண்ண ஓவியம்.**

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.

REGISTERED NO. M. 4392

Registered as Newspaper in Srilanka

# இப்போது, விம் ஏறக்குறைய பாதிவிலையிலே...




## பேரச் சலுகை அளிக்கும் (கேரிபேக்) தூக்குப் பை.

இப்போது ஏறக்குறைய பாதி விலையில் கிடைக்கிறது நீங்கள் விரும்பும் விம்... பணமிச்சம் தரும் (கேரி பேக்) தூக்குப் பைகளிலே!

ஒப்பிட்டுப் பாருங்களேன்

| பேக் | 100 கிராம் விலை |
|---|---|
| 500 கிராம் கேனிஸ்டர் | 135 பைசா |
| 2.5 கிலோ கேரிபேக் பை | 75 பைசா |




உபயோகிப்பிலேயோ மேலும் சிக்கனமாய் கிடைக்கிறது இதில் உங்களுக்கு ஒரு துளியளவு விம் உபயோகிப்பதும் நுரை சொரிந்து பிசுக்குகளை விரைவாக வெளியேற்றுகிறது கறைகளுக்காக... அதிகப் பாத்திரங்களைத் துலக்குகிறது ஒளிமினுக்க.

விரைந்தோடி இன்றே வாங்குங்கள் புதிய விம் கேரிபேக் உங்கள் தேவைக்குகந்த அளவிலே (தேர்ந்தெடுக்க கிடைப்பவை 500 கிராம், 1 கிலோ, அல்லது 2.5 கிலோ பேக்குகள்)

**ஒரு துளி விம் தரும் துலக்கம் அதிகப் பாத்திரங்கள் ஒளிமினுக்கும்**

LINTAS VG 482 2213 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு